வெளியீடு - கஉ

# வடசொற் றமிழ் அகரவரிசை



மறைமலையடிகளின் புதல்வியாரும்,
சென்னை நார்த்விக் மகளிர் கல்லூரித் தலைமைத்
தமிழாசிரியராயிருந்தவருமாகிய

திருமதி. தி. நீலாம்பிகை யம்மையார்

இயற்றியது.



கிடைக்குமிடம்:

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி. : : சென்னை-1.

ஓம்

# முகவுரை

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும்ஓர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமுங் களிதெலுங்கும் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே.

— 'மனோன்மணீயம்'

எழுநூறு ஆண்டுகளாக நந்தண்டமிழ்மொழியில் ஏராளமான வடசொற்கள் வந்து கலந்துவிட்டன. இங்ஙனந் தமிழின்கண் வடசொற்கள் பல வந்து புகுந்தபின் பழந்தமிழ்ச் சொற்களிற் பல வழங்காதொழிந்தன. தமிழிற் கலந்து அதுதன்னை முற்றும் வேறுபடுத்தும் வடசொற்களை இப்போதே நாம் தடைசெய்யாவிடின், தமிழ் தன்னிலை கெட்டு வேறுமொழிபோலாகுமென்பதற்கு ஒருசிறிதும் ஐயமில்லை. வேறு நாடுகளிற் குடியேறிய தமிழ்மக்கள் தம் தமிழ்மொழியினைப் பாதுகாவாமல் திரித்து வழங்கியதோடு, வடமொழிச் சொற்களும் மிகுதியாகத் தமிழிற் கலக்க இடந்தந்தமையினாலேதான் தமிழ்மொழி ஒன்றே தன்னிலை திரிந்து 'மலையாளம்,' 'கன்னடம்,'

'தெலுங்கு' முதலான பலவேறு மொழிகளாயிற்று. தமிழின்கண் வடசொற்கள் நிரம்பவும் விரவினமையால், இவைதாம் வடசொற்கள் இவைதாம் தமிழ்ச்சொற்கள் எனத் தமிழ்மக்களிற் பெரும்பாலார் பிரித்தறியக்கூடாதவாறு அவை தலைமயங்கிக் கிடக்கின்றன.

ஆகவே, இக்காலத்துத் தமிழ்மக்களிற் பெருந்தொகையினர், வடசொற்களையுந் தமிழ்ச்சொற்களையும் பிரித்தறிய முடியாதவர்களாகித் தாமெழுதுங் கட்டுரைகளிலும் நூல்களிலும் வடசொற்களைச் சேர்த்தெழுதியும், அவற்றைத் தமிழ்ச்சொற்களாகவே பிழைபடக் கருதியும் தமிழின் தூய்மையையும், இனிமையையும் பழமையையுங் கெடுத்து விடுகின்றார்கள். வடசொற் கலப்பால் தமிழ் தன்னிலை திரிந்து கேடுறுவதை எனது பதின்மூன்றாவதாண்டில் அறியலானேன். எவ்வாறெனின், யான் பதின்மூன்றாண்டுச் சிறுமியாயிருந்தபோது, 1916-ஆம் ஆண்டில், ஒருநாட் சாயுங்காலம் என் தந்தையாருடன் தோட்டத்தில் உலாவிக் கொண்டு வருகையில், தந்தையார் இராமலிங்க அடிகள் அருளிச்செய்த திருவருட்பாவிலுள்ள

"பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளையைப்பெறுந் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்"

என்னும் பாட்டைப் பாடினார்கள். அப்பாட்டின்

இரண்டாம் அடியாகிய 'உற்றதேகத்தை உயிர் மறந்தாலும்' என்பதனைச் சொன்னபோது, என் தந்தையாரவர்கள் என்னை நோக்கி, "அம்மா! இப்போது நான் பாடிய பாட்டைத் தூயதமிழில் இராமலிங்க அடிகள் எவ்வளவு அழகாகப் பாடியிருக்கின்றார்கள்! ஆனால், அப்பாட்டின் இரண்டாம் அடியிலுள்ள 'தேகம்' என்னும் வடசொல்லை நீக்கி 'யாக்கை' என்னுந் தனித்தமிழ்ச் சொல்லை அவர்கள் அங்கே அமைத்துப் பாடியிருந்தால், இன்னும் எவ்வளவு நன்றாயிருக்கும்? தமிழில் பிறமொழிச் சொற்களைச் சேர்ப்பதால் தமிழ் தன் இனிமை இழந்து போவதோடு, பல தமிழ்ச்சொற்களும் வழக்கில் இல்லாமல் இறந்து போகின்றன" என்றார்கள். இதுகேட்ட அன்றுமுதல் தனித்தமிழிலேயே பேசவும் எழுதவும் வேண்டுமென்று தந்தையாரும் யானும் உறுதிகொண்டோம். அவ்வாண்டு முதல் யான் வடசொற்றமிழ்ச் சொற்களை ஆராய்ந்தறியு முயற்சியி லீடுபட்டேன். அதன்பின் தனித்தமிழிற் சிலபல கட்டுரைகள் எழுதித் 'திராவிடன்' 'தமிழ்நாடு' முதலிய இதழ்களில் வெளியிடலானேன். பின், வடசொற்களுக்கு நேரான தமிழ்ச்சொற்கள் அடங்கிய 'அகரவரிசை' ஒன்று எழுதி 'வடசொற்றமிழ் அகரவரிசை' என்னும் பெயரால் பதினேந்தாண்டுகளுக்கு முன் 'திராவிடன்' இதழில் வெளியிட்டேன், அப்போதெழுதத் துவங்கிய இவ் 'வடசொற் றமிழ் அகரவரிசை' எல்லாம்வல்ல இறைவ

னருளால் இவ்வியாண்டிற்றான் ஒருவாறு முடிவு பெற்றது. வடசொற்களுக்கு இதன்கண் காட்டப் படும் தமிழ்ச்சொற்களைவிட இன்னுந் திறமான தமிழ்ச்சொற்களை எவரேனுந் தெரிவிப்பார்களா யின், அவற்றை அவர்கள் பெயருடன் நன்றியறித லோடு அடுத்த பதிப்பில் வெளியிடுவேன். சில தூய தனித்தமிழ்ச் சொற்களை வடசொற்களென ஐயுற்றுக் கூறுவனவற்றிற்கு இந்நூலின் பிற்சேர்க் கையில் ஆராய்ச்சிக் குறிப்புக்கள் எழுதப்பட் டுள்ளன.

இந்நூலின்கணுள்ள ஐயுறவான சொற்கள் சிலவற்றிற்கு ஆராய்ச்சிக் குறிப்பு எழுதியனுப்பிய என் தந்தையாரவர்கட்கு என் நன்றியறிதலும் வணக்கமும் உரியனவாகுக. இந்நூற் கையெழுத்துப் படிகளைப் பார்வையிட்டுச் சில சொற்களுக்கு ஆராய்ச்சிக் குறிப்பெழுதி யனுப்பிய சொல்லா ராய்ச்சிவல்லை பெரியார் (யாழ்ப்பாணம் நல்லூர்) சுவாமி ஞானப்பிரகாசர் அவர்கட்கு என் பெரு நன்றியும் வணக்கமும் உரியனவாகுக.

தி. நீலாம்பிகை.



ஓம்

# வடசொற்றமிழ் அகரவரிசை

| வட சொற்கள் | தமிழ்ச் சொற்கள் |
|---|---|
| அகக்கரணம் | உட்கருவி, மன முதலியன. |
| அகங்காரம் | செருக்கு, இறுமாப்பு, முனைப்பு, யானெனல். |
| அகங்கிருதன் | செருக்கன். |
| அகசு | பொழுது, காலம், எல், பகல். |
| அகசுமாத்தாய் | எதிர்பாராத வகையாய், தற்செயலாய். |
| அகடம் | முறையின்மை, பொல்லாங்கு. |
| அகடவிகடம் | வேறுபட்டது, குறும்பு, தட்டுமாற்று. |
| அகடிதகடனா சமர்த்தன் | செய்தற்கரியதைச் செய்ய வல்லவன். |
| அகடிதம் | நிறைவேற்றற்கரியது. |
| அகண்டபரிபூரணம், அகண்டபூரணம் | எங்கும் நிறைவு. |
| அகண்டம் | எல்லாம், முழுமை, பிரிக்கப்படாதது. |
| அகண்ட வாக்கியம் | பெருஞ்சொல். |

---

* கலப்பு - வடசொல் தென்சொற் கலந்தது.

† அயல்மொழிச் சொல் = அயல்மொழிச் சொல் தமிழில் வழங்குவது. இவற்றை இவ்வடையாளங்கள் குறிக்கும்.

| | |
|---|---|
| அகண்டன் | கடவுள், ஒருவன், முழுமுதல், பிரிவிலான். |
| அகண்டாகண்டன் | கடவுள், முழுமையோன். |
| அகண்டாகார ஞானம் | எங்குநிறை அறிவு, முற்றறிவு, பேரறிவு. |
| அகண்டாகாரம் | பெருவெளி, வரம்பிலாமை, எல்லையின்மை, பெரும் பரப்பு. |
| அகதங்காரன் | மருத்துவன். |
| அகதம் | உடல்நலம், மருந்து. |
| அகதன் | நோயிலி. |
| அகதி | அறவை, வறியன், ஏழை, புக லிலான், யாருமற்றவன். |
| அகநம் | பெருமையின்மை. |
| அகநிட்டம், அகநிஷ்டம் | மேலானது, உயர்ந்தது. இணையில்லாதது (அ + கநிஷ் டம்) = மூத்தது. |
| (அக)நிருவிகற்ப சமாதி | (உள்ளம்) வேறின்றிக்கூடல். |
| அகந்தை | இறுமாப்பு, செருக்கு. |
| அகமருடணம் அகமர்ஷணம், | கழுவாய், தீங்கொழிப்பது (நீருள் வணக்கம்) |
| அகம் | உயிர், நான். |
| அகம்பாவம் | தற்பெருமை, செருக்கு. |
| அகம்பிரமம் | நானே கடவுளெனல். |
| அகம்பிரமவாதி | நானே கடவுளென்போன். |
| அகம்மியை | இழிகுலப்பெண். |
| அகராதி | அகரவரிசை, அகரநிரல், அகரமுதல். |

| | |
|---|---|
| அகர்த்தா | முதல்வனல்லான், உரிமையிலான். |
| அகர்நாதன், அகர்ப்பதி, அகர்மணி | கதிரவன். |
| அகர்மம் | தகாச்செயல், செயல்இன்மை. |
| அகர்முகம் | புலரிக்காலை, விடியற்காலம், விடியல். |
| அகற்பிதமரணம் | தகாச்சாவு. |
| அகற்பிதம் | இயல்பு. |
| அகஸ்மாத்து | தற்செயல், திடீரெனல். |
| அகாதம் | மிகுந்த ஆழம், கரவு, புரட்டு, அறியலாகாதது, நீந்து புனல் (பிங்கலந்தை) |
| அகாதன் | ஆழமானவன், கரவுடையான், புரட்டன். |
| அகாத்தியம் | பொல்லாங்கு, ஆழமானது. |
| அகாரணம் | ஏதுவின்மை, வழியின்மை, தற்செயல். |
| அகாரி | இடி, இந்திரன், கடவுள். |
| அகாலமரணம், அகாலமிருத்தியு | முதிராச்சாவு, இளஞ்சாக்காடு. |
| அகாலம் | இசையாக் காலம், தகாக்காலம். |
| அகி | பாம்பு, இரும்பு. |
| அகிஞ்சனன் | வறியன், ஏழை. |
| அகிதம், அஹிதம் | தீமை, இன்னாமை, மறம். |
| அகிதர் | பகைவர், ஒன்னார். |
| அகிதலம் | கீழுலகு, கீழ்நிலம். |

| | |
|---|---|
| அகிதுண்டிகன் | பாம்பாட்டி, பாம்பு பிடிப்போன். |
| அகிபதி | பெரும்பாம்பு, ஆதிசேடன் |
| அகிபுக்கு | கருடன், கீரி, மயில். |
| அகிம்சை, அஹிம்சை | இன்னாசெய்யாமை, கொல்லாமை. |
| அகிருத்தியம், அகிர்த்தியம் | அடாச்செய்கை, தீச்செயல், அட்டூழியம். |
| அகிலகாரணன் | முழுமுதற் கடவுள், எல்லாவற்றிற்குந் தலைவன், முழுமுதல்வன். |
| அகிலநாயகன் | முழுமுதல்வன். |
| அகிலபோகம் | உலக நுகர்ச்சி. |
| அகிலம் | எல்லாம், உலகு, வையம், நிலம். |
| அகிலரூபன் | எல்லாமானோன். |
| அகிலலோகம் | எல்லா உலகம். |
| அகிலாண்டகோடி | எண்ணிலுலகு. |
| அகிலாண்டம் | எல்லா உலகம். |
| அகிவைரி | கருடன், மயில். |
| அகீசன் | ஆதிசேடன். |
| அகீநம் | குறைவின்மை. |
| அகோசரம் | அறியொணாதது, எட்டாதது. |
| அகோதாரை | பெரும் பொழிவு. |
| அகோரம் | அழகின்மை, கொடுமை, நடுக்கம். |
| அகோராத்திரம் | பகலிரவு, அல்லும்பகலும். |
| அக்கணம் | அப்பொழுது, அந்நொடி. |
| அக்கதயோனி | ஆடவனைச்சேராத மங்கை. |
| அக்கமை | பொறுமையின்மை. |
| அக்கயத்துவம் | அழிவின்மை. |
| அக்கதை, அட்சதை | மங்கல அரிசி, மஞ்சளரிசி. |

அக்கதாரி — கண்மணி அணிந்தோன்
அக்கம் = அக்ஷம் — கண், விழி, பொன், விளை பொருள்(கூலம்), கண்மணி.
அக்கரம் = அட்சரம் — எழுத்து, அழிவில்லது.
அக்கரம் = அச்சரம் — வாய்ப்புண்.
அக்கராரம்பம் = அட்சராப்பியாசம் — எழுத்தறிவித்தல், பள்ளிக்கு வைத்தல்.
அக்காரம் — வெல்லம், கன்னல்.
அக்கி = அக்ஷி — கண், விழி, வெப்புக் கொப்புளம்.
அக்கிதாரை — விழியுருண்டை, கண்மணி.
அக்கியாதம் — மறைவு.
அக்கியாதவாசம் = அஞ்ஞாதவாசம் — மறைந்துறைதல், கரந்துறைதல்.
அக்கியானம் = அஞ்ஞானம் — அறியாமை, இருள்.
அக்கியானி = அஞ்ஞானி — அறிவிலான், புல்லறிவாளன்.
அக்கிரகன் — முதல்வன், தலைவன்.
அக்கிரகாரம் = அக்கிராரம் — பார்ப்பனச்சேரி.
அக்கிரபூசனை, அக்கிரபூசை — முதல்வழிபாடு.
அக்கிரமம் — ஒழுங்கின்மை, முறைகேடு.
அக்கிரமி — கொடியோன், தீயோன், முறைகேடன்:
அக்கிரம் — நுனி, முனை, முதல்.

அக்கிராசனம் — முதலிருக்கை, தலைமை.
அக்கிராசனாதிபதி — அவைத்தலைவர், தலைவர், முதல்வர்.
அக்கினி, அக்நி — நெருப்பு, தீ, அனல், எரி, தழல்.
அக்கினிகணம் — தீப்பொறி, நெருப்புப்பொறி.
அக்கினிஹஸ்தம் — அனற்கை.
அக்கினி கலை — தீக்கால், தீமூச்சு.
அக்கினிகாரியம் — எரி ஓம்பல்.
அக்கினிகேது — தீப்புகை.
அக்கினிகோணம் — தென்கீழ்மூலை.
அக்கினிகோத்திரம் — தீவேள்வி, தீவழிக்குடி.
அக்கினிசகன், அக்கினிசகாயன் — காற்று, கால், தீயின் நண்பன்.
அக்கினிசாலம் — நெருப்பிற்செய்யும் மாய வேலை.
அக்கினிச்சுவாலை — தீப்பிழம்பு, அனற்பிழம்பு, தீச்சுடர்.
அக்கினிட்டோமம் — தீக்கடவுளுக்குச் செய்யும் ஒருவகை வேள்வி.
அக்கினிதாரணம் — தீவளர்த்தல்.
அக்கினித்தம்பநம், அக்கினிஸ்தம்பநம் — தீக்கட்டு, அனற்கட்டு.
அக்கினித்தம்பம் — தீத்தூண்.
அக்கினித்திரயம் — முத்தீ.
அக்கினித்திராவகம் — ஒருவகைத் தீநீர்.
அக்கினிநட்சத்திரம், அக்கினிநாள் — தீநாள், தீக்கோள்.

அக்கினிபம் — பொன்.
அக்கினியாலயம் — வேள்வித் தீக்குழி.
அக்கினிப் பிரவேசம், அக்கினிப் பிரவேசனம் — தீப்பாய்தல், தீப்புகுதல். தீக்குளித்தல், எரி புகுதல்.
அக்கினிமந்தம் — கோங்கமரம், பசியின்மை, செரியாமை.
அக்குரு — விரல்.
அங்ககணிதம் — எண் கணக்கு.
அங்ககீனம், அங்கஹீனம் — உறுப்பறை, உறுப்புக்குறை.
அங்கசங்கம் — மெய்ப்புணர்ச்சி, புணர்ச்சி.
அங்கசன் — காமவேள், காமன், மகன்.
அங்கசேட்டை, அங்கசேஷ்டை — உறுப்பசைவு.
அங்கசம் — குருதி, மயிர், காமம், நோய்.
அங்கசை — மகள்.
அங்கதம் — தோளணி, பாம்பு, பொய், வசை.
அங்கபங்கம் — உறுப்புக்குறைவு, உறுப்பறை, உறுப்புக்கேடு.
அங்கப்பிரதக்கணம், அங்கப்பிரதட்சணம் — உடல்வலமுருளல், வலம்புரளல்.
அங்கநம் — அசைதல், போதல், முற்றம்.
அங்கனை — பெண்.
அங்கரக்கா — உடற்பாதுகாப்பாக அணியும் சட்டை.

அங்கம் — உறுப்பு, எலும்பு, அடையாளம்.
அங்கரட்சகர் — மெய்காப்பாளர்.
*அங்கவியல் — உறுப்பியல்.
அங்கவீனன் — உடற்பழுதன், உடற்கேடன், உறுப்பறையன்.
அங்காதிபாதம் — முழு உடம்பு, தாடலை, அடி, தலை.
அங்காரவல்லி — குறிஞ்சாக்கொடி, சிறுதேக்கு.
அங்காரன் — நெருப்பு, செவ்வாய்.
அங்கி — நெடுஞ்சட்டை, தீ, தீக்கடவுள்.
அங்கிகாரம், அங்கீகரணம், அங்கீகாரம் — உடன்பாடு, ஒப்பு.
அங்கீகரித்தல் — ஏற்றுக்கொள்ளல், உடன்படல், ஒப்புதல்.
அங்குசபாணி — தோட்டிக்கையன், பிள்ளையார்.
அங்குசம் — தோட்டி, யானைத்தோட்டி, கொக்கி.
அங்குட்டம், அங்குஷ்டம் — பெருவிரல்.
அங்குட்டான், அங்குஷ்டான், — விரலுறை, விரற்புட்டில்,
அங்குரார்ப்பணம் — முளை இடுதல்.
அங்குலம் — விரற்கடை, விரலளவு.
அங்குலி — விரல்.
அங்குலிகம், அங்குலியம் — விரலணி, கணையாழி.

| | |
|---|---|
| அங்கூடம் | அம்பு, கிரி. |
| அசம், அஜம் | ஆடு. |
| அசகாயம் | உதவியின்மை. |
| அசங்கதம் | ஒழுங்கின்மை, அருவருப்பு, வெறுப்பு, பொய், பொருந்தாமை. |
| அசங்கமம் | புணர்ச்சியின்மை. |
| அசகம் | மலையாடு, விடாமை. |
| அசகரம் | பெரும் பாம்பு. |
| அசகாயசூரன் | பிறர்உதவியின்றிப் பகைவரை வெல்லக்கூடியவன். |
| அசகி | பகைவன். |
| அசகசாந்தரம் | ஆட்டுக்கும் யானைக்கும் உள்ள மாறுபாடு. |
| அசகியம், அசங்கியம் | அருவருப்பு. |
| அசங்கிதம் | அச்சமில்லாதது, ஐயுறவின்மை. |
| அசங்கம் | தனிமை. |
| அசங்கன் | கூட்டம் இல்லாதவன். |
| அசங்கியேயம் | எண்ணக்கூடாதது. |
| அசங்கை | ஐயமின்மை. |
| அசங்கோசம் | அடக்கமின்மை. |
| அசஞ்சலம் | அசைவின்மை. |
| அசத்தம் | ஒலியின்மை, ஓசையின்மை. |
| அசத்தி | தளர்ச்சி, வலுக்குறை. |
| அசத்தியபாவனை | பொய்க்கற்பனை. |
| அசத்தியம், அசத்தை | பொய். |

| | |
|---|---|
| அசத்து | இல்பொருள், சாரமற்றது. |
| அசத்துக்கள் | கீழோர், சிறியோர் |
| அசத்துவம் | வெளிப்படாமை, தீமை, வலியின்மை. |
| அசந்ததி | வழிமுறையின்மை. |
| அசந்தம் | உயிரெழுத்திலே முடியுஞ் சொல். |
| அசந்துட்டி | மகிழ்ச்சியின்மை. |
| அசந்தர்ப்பம் | நேரமின்மை, காலத்தவறு. |
| அசந்துட்டம் | விருப்பமின்மை, மகிழ்வின்மை. |
| அசம்பிரேட்சிதம் | ஓர்தலற்றது, நன்கு கருதப்படாதது. |
| அசபன் | ஆடுமேய்ப்போன். |
| அசப்பியம் | அவைக்காகாச் சொல். |
| அசமந்தம் | சோம்பல், மடி, மலைவு. |
| அசமந்தன் | மடியன், சோம்பேறி. |
| அசம்பவம் | நிகழாதது, மாறுகோள். |
| அசம்பாவிதம் | நடவாதது, இயற்கை, நேர்பிலது, நிகழாதது. |
| அசம்பிரேக்ஷிய காரித்துவம் | ஆராயாது செய்தல். |
| அசம்போகம் | புணர்ச்சியின்மை, மகிழ்ச்சியின்மை. |
| அசம்மதம் | உடன்பாடின்மை. |
| அசரம் | அசைவில்லாதது, இயங்காதது, நிலையியல். |
| அசரியம் | அழிவற்றது. |
| அசரப் பொருள் | நிலையியற் பொருள். |
| அசரீரி | உருவற்றது, வானொலி. |
| அசரீரிவாக்கு | வான்மொழி, வானொலி. |

அசரை — அழிவின்மை.
அசலம் — அசையாதது, மலை, அம்பு.
அசலனம் — அசைவின்மை.
அசலன் — அசைவிலான், கடவுள்.
அசலாதிபன் — மலையரசன்.
அசலை — மலைமகள், நிலமகள்.
†அசல் (இந்துஸ்தானி) — முதல், படி, மூலம்.
அசவாகநன் — தீக்கடவுள், முருகன்.
அசற்காரியம் — உள்ளதல்லாதது.
அசற்காரியவாதம் — இல்லது தோன்றுமென்னும் வழக்கு.
அசற்பாவம் — இல்லாதது.
அசனப்பிரியன் — பெருந்தீனியன். பேருணினன்.
அசனம் — சோறு, உணவு.
அசன் — பிறப்பற்றவன்.
அசாக்கிரதை, அஜாக்கிரதை — விழிப்பின்மை, கருத்தின்மை, உன்னிப்பின்மை, அசட்டை, பராமுகம்.
அசாசநம் — அரசாட்சியின்மை.
அசாதம் — பிறவாதது.
அசாதுரியம் — திறமின்மை.
அசாத்தியம் — அருமை, முடிக்கக்கூடாதது, அரிது.
அசாபலம் — பயனின்மை.
அசித்து — பருப்பொருள், அறிவில் பொருள்.
அசிந்தன் — எண்ணப்படாதவன்.
அசிந்தியம் — நினைவிற் கெட்டாதது.

| | |
|---|---|
| அசிபத்திரம் | வாளலகு, படையுறை. |
| அசினம், அஜினம் | தோல். |
| அசிரணபேதி, அஜீரணபேதி | செரியாக்கழிச்சல். |
| அசீரணம், அஜீரணம் | பசியின்மை, செரியாமை, அழிவுபடாமை. |
| அசீரியம் | அழியாதது. |
| அசீலன் | நல்லொழுக்கமில்லாதவன். |
| அசீவநி, அசீவம் | இறப்பு. |
| அசுகிருத்து | பகைவன். |
| அசுதை | நஞ்சு. |
| அசுசி | அழுக்கு, வாலாமை, மாசு. |
| அசுத்தகன்மம் | தூவாவினை (சித்). |
| அசுத்த*மாயா தத்துவம் | தூவாமாயை நிலை. |
| அசுத்த*மாயை | தூவாமாயை. |
| அசுத்தம் | அழுக்கு, துப்புரவின்மை, தூய்மையின்மை. |
| அசுத்தவர்ணரூபம் | தூவா எழுத்தொலி வடிவம். |
| அசுத்தவிஷதிரவியம் | தூவா நச்சுப்பொருள். |
| அசுத்தவிஷவாயு | தூவா நச்சுக்காற்று. |
| அசுத்தாத்துவா | தூவாவழி (சித்). |
| அசுபக்கிரியை | பிணச்சடங்கு, சாவுச்சடங்கு. |
| அசுபம் | நன்மையல்லாதது, தீமை, தீயது. |
| அசுமாந்தகம் | நாணல். |
| அசுரகுரு | வெள்ளி (கோள்). |
| அசுரசந்தி | சாய்ங்காலம். |

| | |
|---|---|
| அசுர*மணம் | வலிந்தமணம். |
| அசுராரிபு | திருமால். |
| அசுரர் | வானோர்க்கு மாறுபட்டவர், இருள்மிக்கவர். |
| அசுவகந்தி | அமுக்கரா. |
| அசுவகந்திதைலம் | அமுக்கரா நெய். |
| அசுவசாத்திரம் | குதிரையிலக்கணங் கூறு நூல். |
| அசுவசாலை | குதிரைப்பந்தி. |
| அசுவத்தம் | அரசு. |
| அசுவபாலன் | குதிரைப்பாகன். |
| அசுவமுகன் | குதிரைமுகம் உள்ள கிந்நரன். |
| அசுவமேதம் | குதிரை வேள்வி. |
| அசுவம் | குதிரை, பரி. |
| அசுவினி, அசுவதி | குதிரை நாள், முதனாள். |
| அசூசம், அசூசி | அழுக்கு, மாசு, துப்புரவின்மை. |
| அசூதி | மலடி. |
| அசூயை | அழுக்காறு, பொறாமை. |
| அசேடம், அசேஷம் | எல்லாம், முழுதும். |
| அசேதன*உலகம் | பருப்பொருளுலகம், அறிவில் உலகம். |
| அசேதன சரீரம் | பருவுடம்பு, அறிவில் உடல். |
| அசேதன*செல்வம் | பருப்பொருட் செல்வம். |
| அசேதனம் | அறிவில்பொருள், அறிவில்லது. |
| அசைதந்நியம் | அறிவில்லாத நிலை. |
| அசைதன்னியரூபம் | பருவுரு, பருஉடல். |
| அசோகம் | மகிழ்ச்சி, துன்பமின்மை, பிண்டிமரம். |

| | |
|---|---|
| அசௌகரியம் | நலமின்மை, இடைஞ்சல். |
| அச்சயன் | அழிவிலான், முடிவிலான், கடவுள். |
| அச்சுதம் | அழியாமை. |
| அச்சுதன் | அழிவிலான், திருமால், கடவுள். |
| அச்சுவத்தம் | அரச மரம். |
| அச்சுவம் | குதிரை. |
| அஞ்சபாதம் | புள்ளடி. |
| அஞ்சரதன் | நான்முகன். |
| அஞ்சலி | கும்பிடல், வணக்கம். |
| அஞ்சலி வந்தனம் | நெற்றியில் கைகுவித்து வணங்கல். |
| அஞ்சவத்தை | ஐவகை நிலை. |
| அஞ்சன சலாகை | மைதீட்டுங்கோல். |
| அஞ்சனம் | மை, கறுப்பு, இருள், நீலமலை. |
| அஞ்சனவண்ணன் | திருமால், கரியமால், கருநிறத்தன். |
| அஞ்சம் | அன்னப்புள். |
| அஞ்சிட்டன் | கதிரவன். |
| அஞ்சுகம் | கிளி, மேலாடை. |
| அஞ்சுமாலி | கதிரவன். |
| அஞ்ஞதை | அறியாமை. |
| அஞ்ஞத்துவம் | அறியாமை, தெரியாமை |
| அஞ்ஞன் | அறிவிலான், அறிவிலி. |
| அஞ்ஞாதி, அஞ்ஞானி | அறிவிலி. |
| அஞ்ஞாதம் | மறைவு, அறியப்படாதது. |
| அஞ்ஞாதவாசம் | மறைந்துறைதல். |
| அஞ்ஞாதவாசஸ்தலம் | மறைந்துறைவிடம். |

| | |
|---|---|
| அஞ்ஞாதவாசி | மறைவிடமிருப்போன். |
| அஞ்ஞானம் | அறியாமை, இருள், மருள். |
| அஞ்ஞை | அறிவிலான். |
| அடம் | பிடிவாதம். |
| அட்சயபாத்திரம் | திருவோடு, ஏற்போடு, இரப்போர் கலம். |
| அட்சரதூலிகை | எழுதுகோல். |
| அட்ச*மாலை | சிவமணி மாலை, (உருத்திராக்கமாலை). |
| அட்சம், அக்ஷம் | கண், விழி. |
| அட்சயம் | அழிவின்மை. |
| அட்சரசுத்தம் | எழுத்துத் திருத்தம், ஒலிப்புத் திருத்தம். |
| அட்சரதாபனம் | எழுத்தமைத்தல். |
| அட்சரம் | எழுத்து. |
| அட்சி | கண், கண்ணி. |
| அட்டகசம் | எண் பக்க யானை. |
| அட்டகணம், அஷ்டகணம் | எண்வகைக்குழு, எண்பேராயம். |
| அட்டகம், அஷ்டகம் | எண்வகை, எட்டாலானது. |
| அட்டகருமம், அஷ்டகருமம் | எண்வினை, எண்தொழில். |
| அட்டகாசம் | பெருநகை, பெருஞ் சிரிப்பு, புரளி. |
| அட்டகிரி | எட்டுமலை. |
| *அட்ட குணம் | எண்குணம். |
| அட்டசித்தி, அஷ்டசித்தி | எண்பொருட் பேறு. |

| | |
|---|---|
| அட்டதநம் | எண்வகைச் செல்வம். |
| அட்டதா | எட்டுப் பிரிவு. |
| அட்டதிக்கு, அஷ்டதிக்கு | எண்புறம். |
| அட்டதிக்குப் பாலகர் | எண்புறக் காவலர். |
| அட்டபந்தனம், அஷ்டபந்தனம் | எண்புறக்கட்டு. |
| அட்டபரிசம் | எண்வகை ஊறுகள். |
| அட்டபுஷ்பம், அட்டபுட்பம் | எண்வகைப் பூக்கள். |
| அட்ட*மங்கலம் | எண்வகை மங்கலம். |
| அட்டமி | எட்டாம் நாள். |
| அட்டமூர்த்தம், அஷ்டமூர்த்தம் | எண்வகை வடிவு. |
| அட்டமூர்த்தி, அஷ்டமூர்த்தி | சிவன், 'எட்டுருவன். கடவுள். |
| அட்டம், அஷ்டம் | எட்டு, அருகு. |
| அட்டாங்கநமஸ்காரம் | எட்டுறுப்பு வணக்கம், நிலந் தோய் வணக்கம். |
| அட்டாங்கயோகம் | எட்டுத்தவநிலை. |
| அட்டாதசம் | பதினெட்டு. |
| அட்டாதுட்டி | தாறுமாறு, குறும்பு. |
| அட்டாவதானம், அஷ்டாவதானம் | எண்பொருள் நோக்கு. |
| *அணுரூபம் | நுண்ணுரு. |
| அண்டகோசம் | முட்டைவடிவான உலகம். |
| அண்டகோளம் | உலக உருண்டை. |
| அண்டசம், அண்டஜம் | முட்டைப் பிறப்பு (முட்டையிற் பிறப்பன); |

| | |
|---|---|
| அண்டசரீரம் | உலக உடம்பு. |
| அண்டசன் | நான்முகன். |
| அண்டதரன் | கடவுள். |
| அண்டபகிரண்டம் | இவ்வுலகும் புற உலகும். |
| அண்டபிண்டம் | உலகுடம்பு. |
| அண்டம் | முட்டை, உலகம், வித்து, மூலம். |
| அண்டயோனி | பகலவன், வெய்யோன். |
| அண்டரண்டம் | வானுலகு. |
| அண்டர் | வானோர். |
| அண்டவாதம் | விதைநோய். |
| அண்டன் | சிவன். |
| †அண்டா (உருது) | பெருங்கொப்பரை. |
| அண்டாகாரம் | முட்டைவடிவம். |
| அதகம் | சுக்கு, பெருமருந்து. |
| அதகன் | மருத்துவன். |
| அதபம் | குளிர்ச்சி |
| அதமம் | கடைத்தரம், கீழ்மை. |
| அதமன் | கீழோன், கடையவன். |
| அதம், ஹதம் | தாழ்வு, பள்ளம், அழித்தல், கீழ். |
| அதமாங்கம் | அடி. |
| அதமதாநம் | இழிந்தகொடை. |
| அதமபட்சம் | மிகக்குறைந்த அளவு. |
| அதரபானம் | இதழ் உறிஞ்சல். |
| அதரமதம் | இதழ் ஊறல். |
| அதரம் | கீழுதடு, இதழ். |
| அதரிசனம் | காணப்படாமை. |
| அதரிசனன், அதரிசி | கடவுள், குருடன். |

| | |
|---|---|
| அதர்மசாரி | தீநெறியிற் செல்வோன். |
| அதர்மம், அதருமம் | மறம், தீவினை, அறமின்மை. |
| அதலகுதலம் | கலாம். |
| அதலம் | கீழுலகு. |
| அதவம் | அத்திமரம். |
| அதனப்பிரசங்கி | செருக்கன், பெரும் பேச்சினன். |
| அதனம் | மிகுதி. |
| அதாதா | பிசினன். |
| அதாரன் | மணமாகாதவன். |
| அதிகசிதம் | பெரு நகை. |
| அதிகண்டம் | பெருந்துன்பம். |
| அதிக்கிதம் | கடந்துபோனது, நன்கறியப் பட்டது. |
| அதிகப்பிரசங்கம் | மிகுபேச்சு, மற்றொன்று விரித் தல், தன்மேம்பாட்டுரை. |
| அதிகம் | மிகுதி. |
| அதிகரணம் | நிலைக்களம், உரிமைப் படுத் தல். |
| அதிகாங்கிஷை | பேரவா. |
| அதிகாசம் | பெருநகை. |
| அதிகாந்தம் | பேரழகு. |
| அதிகாரம் | இயல், நூற் கூறுபாடு, நூலின் பகுதி, தலைமை, உயர்நிலை, ஆட்சி. |
| அதிகாரி | தலைவன், முதல்வன், உடைய வன். |
| அதிகாரசிவன் | தலைமைச்சிவன். |
| அதிகாரத்துவம் | உடையனுந்தன்மை. |
| அதிகாலங்காரம் | பெருமையணி. |
| *அதிகாலம் | விடியற்காலம். |

அதிகாலை — விடியற்காலம், புலரிக்காலை.
அதிகிருதை — அதிகாரம் உடையவன்.
அதிக்கம் — மேன்மை.
அதிக்கிரமம் — முறைவழு, வரம்புகடத்தல், நெறிதவறல், ஒழுங்கின்மை, மீறுதல்.
அதிசந்தானம் — ஏய்த்தல்.
அதிசயசத்தி — வியத்தகு ஆற்றல்.
அதிசயம் — புதுமை, வியப்பு.
அதிசாக்கிரதை, அதிஜாக்கிரதை — மிகுவிழிப்பு.
அதிசாரம் — வயிற்றுளைவு, வயிற்றோட்டம், வெப்புக் கழிச்சல்.
அதிசீக்கிரம் — மிகுவிரைவு, மிகுசுருக்கு, கடிது.
அதிசுத்தம் — மிகுதூய்மை.
அதிசூக்குமத்துவம் — மிகுநுட்பத்தன்மை.
அதிசூக்குமம் — மிகுநுண்மை.
அதிசூக்குமதேகம் — மிகுநுண்ணுடல்.
அதிசூக்குமவாக்கு — மிகுநுண்மொழி.
அதிசோபநகை — மலைமகள்.
அதிசௌந்தரியம் — பேரழகு, பெருவனப்பு.
அதிட்டசாலி — நல்வினையாளன், செல்வன்.
அதிட்டம், அதிஷ்டம் — காணப்படாதது, செல்வம், நல்வினைப்பயன், நன்னுகர்ச்சி.
அதிட்டவசம் அதிஷ்டவசம், — நல்வினைப்பயன், நல்வினைவயம்.
அதிட்டானம் — மேற்கொள்ளல், இடம், நிலைக்களம்.

அதிட்டித்தல் நிலைப்படுத்தல், மேற்கொளல்.
அதிதவளம் மிகுவெண்மை.
அதிதானம் மிகுதியாக வழங்கல்.
அதிதி விருந்தினன், புதியவன்.
அதிதீரன் ஆண்டகை, தறுகணாளன், மிக்கவலுவினன்.
அதிதீவிரம் மிகுவிரைவு.
அதிதீவிரபக்குவம் மிக முறுகியமனநிலை.
அதிதுரிதம் மிகுவிரைவு.
அதிதேவதை உரிய தெய்வம், குலதெய்வம்.
அதிதேவன் மேலான கடவுள்.
அதிபதி, அதிபன் தலைவன்.
அதிபத்தினி தலைவி, பெருமாட்டி.
அதிபலம் மிகுவன்மை.
அதிபாதகம் கொடுவினை.
அதிபாரம் பெருஞ்சுமை.
அதிபாவம் பெருந்தீமை, பெருங்குற்றம்.
அதிமதுரம் குன்றிவேர்.
அதிமிதம் அளவின்மை.
அதிமித்திரன் ஆருயிர்நண்பன், கணவன்.
அதிமுத்தி பெரும்பேறு.
அதிமூர்க்கம் பெருஞ்சினம், கடுஞ்சினம்.
அதிமோகம் ஒருதலைக்காமம்.
அதியட்சன் கண்காணி.
அதியம் மிகுதி.
அதியவசியம் இன்றியமையாமை.
அதியுஷ்ணம் மிகுவெப்பு.
அதிரகசியம் அருமறை.

| | |
|---|---|
| அதிரகசியார்த்தம் | நனிமறைந்த பொருள். |
| அதிரசனம் | காணக்கூடாதது. |
| அதிரிசம் | காணப்படாதது. |
| அதிரிசன், அதிருசன் | குருடன். |
| அதிரித்தம் | மிகுதி. |
| அதிருக்கு | குருடு. |
| அதிருஷ்டம் | பார்வைக்கெட்டாதது. |
| அதிருத்தி, அதிருப்தி | மனநிறைவின்மை, மனக்குறை. |
| அதிரூபசௌந்தரியவதி | பேரழகி. |
| அதிரூபம் | பேரழகு, மிகச்சிறந்த வடிவம். |
| அதிவிசித்திரம் | மிகுவியப்பு. |
| அதிவித்தாரம், அதிவிஸ்தாரம் | அகன்ற இடம். |
| அதிவியாப்தி | மிகைபடக்கூறல் (தரு). |
| அதிவிருட்டி | மிகுமழை. |
| அதிவேகம் | மிகுவிரைவு. |
| அதிவேதனம் | மிகுகூலி. |
| அதினம், அதீனம் | உரிமை. |
| அதீதம் | எட்டாதது, கடந்தது. |
| அதீதன் | எட்டாதவன், கடந்தவன், கடவுள். |
| அதீதாவஸ்தை | பேருறக்க நிலை, கடந்த நிலை. |
| அதீரை | அமையாதவன். |
| அதுகாபாவம் | இப்பொழுதுள்ளது. |

| | |
|---|---|
| அதுட்டி | துன்பம். |
| அதுநா | இப்பொழுது. |
| அதுலன் | ஒப்பிலி. |
| அதுல்லியம் | ஒப்பின்மை. |
| அதேகி | உடலற்றவன். |
| அதைரியம் | திட்பமின்மை, அச்சம். |
| அதோகதி | கீழிறக்கம், பள்ளம். |
| *அதோபாகம் | கீழ்ப்பாகம். |
| *அதோமுகம் | கீழ்முகம் |
| அதோமுகி | தும்பைச்செடி. |
| அதோங்கம் | கீழ் உறுப்பு, பெண்குறி. |
| அதோபுடம் | கீழ்ப்புறம். |
| அதோவாயு | கீழ்முகக்காற்று. |
| அத்தகோளம், அர்த்தகோளம் | பாதி உருண்டை. |
| அத்தசந்திரன், அர்த்தசந்திரன் | பாதி நிலா. |
| அத்தசகாயம், அர்த்தசகாயம் | பொருளுதவி. |
| அத்தசாமபூசை, அர்த்தசாமபூசை | யாமவழிபாடு, நள்ளிரா வழிபாடு. |
| அத்தசாமம், அர்த்தசாமம் | நள்ளிரவு. |
| அத்தநாசம், அர்த்தநாசம் | பொருளழிவு, பொருட்கேடு. |
| அத்தநாரீசுரன், அர்த்தநாரீஸ்வரன் | மங்கைபங்கன், மாதிருக்கும் பாதியன், உமையொரு பாகன். |
| அத்தபாகம், அர்த்தபாகம் | பாதி, அரைப்பாகம், அரைப்பங்கு. |

| | |
|---|---|
| அத்தமம், அஸ்தமயனம், அஸ்தமயம், அத்தமனம், அஸ்தமனம், | சாயங்காலம், மாலை, மறைவு, அடைவு, பொழுது படல். |
| அத்தம், அஸ்தம், | கை. |
| அத்தம் அர்த்தம் | பொருள் பாதி. |
| அத்தமிக்கை, அஸ்தமிக்கை | படுக்கை, சாய்வு. |
| அத்தவர் | அவா உடையோர். |
| அத்தவேடணை | பொருளவா. |
| அத்தார்ச்சநம் | பொருள் தேடுதல். |
| அத்தாவரம் | அசைவுள்ள பொருள். |
| அத்திசயநன் | திருமால். |
| அத்திதி | நிலையின்மை. |
| அத்திபங்கம் | எலும்பு முறிதல். |
| அத்திமாலி | சிவன். |
| அத்தியசநம் | மிகுதியாக வுண்டல் |
| அத்தி, அஸ்தி | எலும்பு. |
| அத்தி, ஹத்தி, அத்தியை | கொலை. |
| அத்திசுரம், அஸ்திசுரம், | எலும்புக் காய்ச்சல். |
| அஸ்திநாஸ்தி வாதம் | உண்டுமில்லையுங் கூறல்(சித்.). |
| அத்திபாரம், அஸ்திபாரம் | அடிப்படை, கடைக்கால். |

| | |
|---|---|
| அத்தியட்சன் | தலைவன், கண்காணி. |
| அத்தியந்தாபாவம் | என்றுமின்மை (சி. பா.). முழுதுமின்மை (தரு.) |
| அத்தியந்தம் | மிகுதி, மட்டற்றது, முழுதும் (தரு.) |
| அத்தியயனம் | மறை ஓதல், ஓதல். |
| அத்தியாசம் | மாறுபாட்டுணர்ச்சி. |
| அத்தியாசை | பேரவா. |
| அத்தியாத்தும ஞானம் | இறைவனை யறியுமறிவு. |
| அத்தியாத்துமா | உயிர். |
| அத்தியாத்துமிகம் | தன்னால் வருந்துன்பம் (சித்.) |
| அத்தியாபகன் | மறைஆசிரியன். |
| அத்தியாபனம் | மறை ஓதுவித்தல். |
| அத்தியாயம் | படலம், நூற்பிரிவு. |
| அத்தியாரூடம் | மிக வுயர்ந்தநிலை. |
| அத்தியாவசியகம் | இன்றியமையாமை, கட்டாயம், முதன்மை. |
| அத்திரசத்திரம் | அம்பும் வாளும். |
| அத்திரசாத்திரம் | வில்வித்தை. |
| அத்திராதாரம் | அம்புக்கூடு. |
| அத்துருக்கம் | அகழியாற் சூழப்பட்ட கோட்டை. |
| அத்தேயம் | களவுசெய்ய எண்ணுமை. |
| அத்திரசந்தானம் | அம்பு மழை. |
| அத்திரம், அஸ்திரம், | அம்பு, நிலையின்மை. |
| அஸ்து | அப்படியாக. |
| அத்துவயம் | இரண்டன்மை (சித்.). |
| அத்துவா, அத்துவம் | வழி, நெறி (சித்.). |

| | |
|---|---|
| அத்துவிதம், அத்துவைதம், அத்துவிதீயம் | இருமையன்மை (சித்)., இரண்டற்றது. ஒன்றிப்பு, பொருத்தம். |
| அத்துவானம் | பாழ்வெளி, பாழ்ங்காடு. |
| அநகங்காரம் | ஆணவமற்றது. |
| அநகம் | மாசின்மை. |
| அநகம் | அழகியது. |
| அநகன் | தீவினையற்றவன். |
| அநக்கம் | குருடு. |
| அநக்கரம் | சொல்லத்தகாதது. |
| அநக்கரன் | ஊமை. |
| அநங்கலீலை | காமக்களியாட்டம். |
| அநங்கம் | உடலின்மை. |
| அநங்கன் | காமவேள், உருவிலான். |
| அநசூயை | அழுக்காறின்மை. |
| அநஞ்சனம் | குற்றமின்மை. |
| அநட்சரசத்தம் | எழுத்தொலியல்லாதது. |
| அநந்தசயநன், அநந்தசாயி | திருமால். |
| அநநுபாடணம் (தரு) | வழிமொழியப்படாமை. |
| அநந்தகீர்த்தி | பெரும்புகழ். |
| அநந்தகோடி | எண்ணத்தொலையாதன. |
| அநந்தசக்தி | அளவிலாற்றல், முடிவிலாற்றல் (சித்.). |
| அநந்தசயனம் | பாம்புப் படுக்கை, அரவணை. |
| அநந்தசுகம் | வரம்பிலின்பம் (சித்.). |
| அநந்தசொரூபி | கடவுள், அளவில்வடிவினன். |
| அநந்தஞானம் | வரம்பிலறிவு, பேரறிவு. |
| அநந்ததரிசனம் | வரம்பில் காட்சி, பேருட்காட்சி. |

| | |
|---|---|
| அநந்தம் | அளவின்மை, முடிவில்லது. |
| அநந்தரம் | மேல். |
| அநந்தன் | கடவுள், முடிவிலான், பாம்பு. |
| அநந்தாநந்தம் | வரம்பிலின்பம், பேரின்பம். |
| அநந்தை | உமை, இறைவி, அழிவில்லாதவள். |
| அநந்நியம் (தரு.) | ஒற்றுமை, பிரிவிலாமை, வேறன்மை. |
| அநந்நியை | பிரிவிலாற்றல். |
| அநந்நுவயாலங்காரம் | இயைபின்மையணி. |
| அநந்தலோசநன் | கடவுள். |
| அநபாயம் | அழிவின்மை, குறைவின்மை. |
| அநர்த்தம் | பயனின்மை, கேடு, வேறுபாடு, மாறுபாடு, தீங்கு. |
| அநவத்தை | வரம்பின்மை, எல்லையில்லாதது. |
| அநருகம் | தகுதியின்மை. |
| அநவரதம் | எப்பொழுதும் |
| அநம் | சோறு. |
| அநர்க்களம் | தடையின்மை. |
| அநர்ப்பம் | மிகுதி. |
| அநலக்கிரி | அண்ணமலை. |
| அநலம் | தீ. |
| அநவச்சின்னம் | எல்லைப்படாதது |
| அநவத்தாதோஷம் | முடிவுகாணாமையாகிய குற்றம். |
| அநவபாசம் | தோற்றமை. |
| அநாகதம் | அறியப்படாதது. |
| அநாசரணம் | ஒழுக்கந்தவறியநடை. |
| அநாசிகன் | மூக்கில்லாதவன். |
| அநாசிரியர் | ஆசிரியர் ஆகாதவர். |

அநாதபம் குளிர்ச்சி.
அநாதிசடிலன் பண்டேசடையையுடைய கடவுள்.
அநாசாரம் ஒழுக்கமின்மை.
அநாசாரன் ஒழுக்கமிலான்.
அநாதம் துணையற்றது.
அநாதரட்சகர் ஏழை காவலன்.
அநாதரம் அன்பின்மை.
அநாதரவு உதவியின்மை.
அநாதன் தனியன்.
அநாதி முன், பழமை, தொன்மை, தோற்றமின்மை, பண்டு, கடவுள்.
அநாதிசித்தன் அருகக் கடவுள்.
*அநாதிகாரணம் தொன்மை ஏது.
*அநாதிகாலம் தொடக்கமற்ற காலம்.
அநாதிகேவலம் படைப்புமுன் தனிநிலை (சித்)
அநாதித்துவம் காலவரம்பில்லாதது, தொன்மை, பழமை.
அநாதிநித்யம் என்றுமுள்ளது (சித்.).
அநாதிநின்மலன் வாலறிவன் (குறள்).
அநாதிபந்தம் இயல்பாயுள்ள ஆணவக்கட்டு.
அநாதிபெத்தசித்து இயல்பாகவே ஆணவத்தாற் கட்டுண்டு கிடந்த உயிர்.
அநாதிபெத்தன் இயற்கையாகவே ஆணவக் கட்டுடையவன், உயிர் (சித்.).
அநாதிபோதம் இயல்பாகவே மெய்யறிவுடைமை (இயல்பாகவே மலத்தினீங்குதல்.)
அநாதிபோதன் இயற்கையறிவினன்.

| | |
|---|---|
| அநாதிமலமுத்தர் | இயல்பாகவே மலப்பிணிப் பற்றவர், தூயோர். |
| அநாதிமுத்தசிவன் | இயல்பாகவே மலப்பிணிப்பி னின்றும்நீங்கியஇறைவன். |
| அநாதிமுத்தத்துவம் | இயல்பாகவே மலப்பிணிப்பில் லாமை. |
| அநாதியமலன் | இயல்பாகவே மாசிலான். |
| அநாதை | யாருமற்றவன், தாய்தந்தை யிலான். |
| அநாத்தை | நிலையின்மை. |
| அநாந்தம் | இறுதியற்றது. |
| அநாமிகை | ஆழிவிரல். |
| அநாயாசமாதல் | எளிதாதல். |
| அநாரம்பம் | தொடக்கமின்மை. |
| அநாரோக்கியம் | நோயுடைமை. |
| அநார்ச்சவம் | மனக்கோணல், வளைவு. |
| அநாவிருத்தி | திரும்பிவராமை. |
| அநாவசியம் | வேண்டாமை, பயனற்றது. |
| அநாவிருட்டி | மழையின்மை. |
| அநிகம் | சேனை (அணி.) |
| அநிக்கிரகம் | ஒறுத்தலின்மை, காத்தல். |
| அநிச்சகன் | வேட்கையிலான். |
| அநிச்சிதம் | உறுதிப்படாதது. |
| அநிச்சை | விருப்பமின்மை. |
| அநிட்டம் | விருப்பமில்லாதது. |
| அநிட்டை | நிலையின்மை. |
| அநித்தம், அநித்தியம் | நிலையற்றது, நிலையாமை, அழிவு (தரு,). பொய். |
| அநித்தியகாலம் | முடிவுகாலம். |
| அநித்தியத்துவம் | நிலையாமை. |

| | |
|---|---|
| அநிமீலநம் | இறவாமை. |
| அநிமேடம் | பேய். |
| அநியதம் | ஒழுங்கில் வராதது. |
| அநியமம் | ஒழுங்கின்மை. |
| அநியாயம் | முறையின்மை, நடுவின்மை, விலக்கு. |
| அநிருதம் | பொய். |
| அநிருத்தன் | அடங்காதவன். |
| அநிருமலம் | அழுக்கு. |
| அநிர்வசனம் | சொல்லொணாதது. |
| அநிர்வாகம் | கொண்டு நடத்தமுடியாமை. |
| அநிலசகன் | நெருப்பு. |
| அநிலன் | காற்று. |
| அநீகிதம் | விரும்பப்படாதது. |
| அநீகினி | படை. |
| அநீசன் | சிற்றுயிர். |
| அநீசுரவாதி, அநீச்சுரவாதி, அநீசுவரன் | கடவுளில்லையென்போன். |
| அநீதம் | முறையன்மை, நெறியன்மை. |
| அநீதர் | நடுவிலாதவர், கீழ்மக்கள். |
| அநீதி | முறைகேடு. |
| அநீதிமான் | முறைகேடன், நடுவிலான். |
| அநு | கதுப்பு |
| அநுகதநம் | உரையாடல். |
| அநுகதம் | ஈட்டப்பட்டது, தொடர்பு. |
| அநுகதன் | பின்தொடர்வோன். |
| அநுகரணம் | ஒப்பாதல், ஒன்றுபோற் செய்தல். |
| அநுகருடணம் | இழுத்தல். |

| | |
|---|---|
| *அநுகூல காலம் | நல்லகாலம், ஆங்காலம். |
| அநுகூலம் | கைகூடுதல், பயன், உதவி, நன்மை, துணை. |
| அநுகமநம் | கூடப்போதல். |
| அநுக்கிரக கர்த்தர் | அருள்புரியுங் கடவுள். |
| அநுக்கிரகமணிகை | பொருளட்டவணை. |
| அநுக்கிரகம் | அருளிரக்கம், அருள். |
| அநுசந்தானம் | நினைவுகூர்தல், பழகுதல். |
| அநுசயம் | பற்று, வருத்தம், பகைமை. |
| அநுசரணம் | பழக்கம், பின்றொடர்தல். |
| அநுசரணை | சார்பு. |
| அநுசரித்தல், அநுசரிப்பு | பின்பற்றல், கைக்கொள்ளல், சார்தல், தழுவுதல். |
| அநுசன் | தம்பி, பின்னோன், பின்வந்தோன். |
| அநுசிதம் | பொய், தகாதது. |
| அநுஞ்ஞை | உடன்பாடு (தரு). |
| அநுட்டானம் | செயற்பாடு, நடைமுறை, ஒழுக்கம். |
| அநுட்டித்தல் | பின்பற்றல், கைக்கொள்ளல். |
| அநுதாத்தம் | படுத்தல். |
| அநுதாபம் | கழிவிரக்கம், இரக்கம், வருத்தம். |
| அநுதினம் | நாடோறும். |
| அநுத்தம் | பொய். |
| அநுஸ்மரணம் | பின்நினைத்தல். |
| அநுநாதம் | எதிரொலி. |
| அநுபதேசம் | சொல்லப்படாமை. |
| அநுபந்தம் | பின்சேர்க்கை, தொடர்ச்சி, அடுத்து யாக்கப்படுவது. |

| | |
|---|---|
| அநுபயோகம் | பயனற்றது. |
| அநுபவம் | பழக்கம், வழக்கம், நுகர்ச்சி. |
| அநுபவித்தல் | துய்த்தல், நுகர்தல், துவ்வல். |
| அநுபவித்தல் | அழுந்தியறிதல் (சித்,). உழத்தல். |
| அநுபாடணம் | வழிமொழிதல் (தரு.). |
| அநுபாலனம் | துணைக்குடிநீர், காத்தல். |
| அநுபானம் | துணை மருந்து, கூட்டுமருந்து. |
| அநுபூதம் | அறிந்து கொள்ளப்பட்டது. |
| அநுபூதி | மெய்யறிவு. |
| அநுபூதிமான் | மெய்யறிவினன், பேரறிவினன். |
| அநுபோகம் | பழக்கம், வழக்கம், ஆட்சி, நுகர்ச்சி, துய்ப்பு (தரு.). |
| அநுமதி | உடன்பாடு, விடை, கட்டளை, ஆணை, ஒப்புதல். |
| அநுமானப் பிரமாணம் | கருதலளவை (சித்.) |
| அநுமானம், அனுமானம் | ஐயம், வழியளவை, கருதலளவை (தரு.). |
| அநுமானித்தல் | ஐயுறல், கருதல். |
| அநுமித்தல் | ஆராய்ந்தறிதல். |
| அநுமோதம் | உடன்பாடு. |
| அநுயோகம் (தரு.) | சொல்லற் கியைந்தது. |
| அநுலாபம் | கூறியது கூறல். |
| அநுவாதம் | வழிமொழிதல். |
| அநுற்பத்தி | பிறப்பின்மை. |
| அநேகம் | பெரும்பான்மை, பல. |
| அநேகர் | பலர். |
| அநேகாங்கம் | பலவுறுப்புக்கள். |

| | |
|---|---|
| அநேகாந்தம் | பலமுடிவு, ஐயம். |
| அநேகாந்தவாதி | பலமுடிவுக் கொள்கையன், (சித்.). |
| அநேகார்த்தம் | பல்பொருள். |
| அநேகான்மவாதி | உயிர்கள் பல என்னுங் கொள்கையன் (சித்). |
| அநேகேசுரத்துவம் | பல கடவுளாந் தன்மை (சித்.). |
| அநேகேசுரவாதி | பலகடவுட் கொள்கையன் (சித்.). |
| அநைகாந்திகம் | பல முடிவுடையது. |
| அநைக்கியம் | தாறுமாறு, ஒற்றுமையின்மை. |
| அநைசுவரியம் | செல்வமின்மை, வறுமை (சித்.). |
| அநைதிகம் | பழமையற்றது. |
| அந்தகம் | அழிவு. |
| அந்தகரிபு | சிவன். |
| அந்தகன் | அழிப்போன், குருடன். |
| அந்தகாரம் | இருள், அறியாமை. |
| அந்தகாரி | நமனையழித்தவன் (சிவன்) |
| அந்தக்கரணம் | உள்ளம், உட்கருவி (சித்), |
| அந்தக்கரணங்கள் 4 (சித். தத்.) | அகக்கருவிகள் 4 |
| (1) மனஸ் | (1) மனம். |
| (2) புத்தி | (2) அறிவு. |
| (3) சித்தம் | (3) நினைவு. |
| (4) அகங்காரம் | (4) முனைப்பு. |
| அந்தக்கரணான்மவாதி | உட்கருவியே உயிரெனும் கொள்கையன் (சித்.). |
| அந்த க்ஷணம் | அப்பொழுது. |
| அந்தக்கிரகம் | உள் வீடு. |

அந்தஸ்து — நிலைமை, ஒழுங்கு, நிலை.
அந்தப்பிரஞ்ஞன் — தன்னை யறிகிறவன்.
அந்தப்புரம் — உவளகம், அரசியில்லம், உள்ளிடம்.
அந்தமந்தம் — உறுப்புக்கேடு.
அந்தம் — அழகு, முடிவு, குருடு, ஈறு, கேடு, எல்லை.
அந்தரங்க அர்த்தங்கள் — உட்பொருள்கள்.
அந்தரங்கத் தியாகி — ஆமை.
அந்தரங்கம் — அருமறை, மறைபொருள், உள்ளம், தனிமை.
அந்தரங்க விநய பய பக்தி — உள்ளநிறை வணக்கமும், அச்சமும், அன்பும்.
அந்தரங்கன் — உற்ற நண்பன்.
அந்தரசரிதர் — வானிற்றிரிவோர்.
அந்தர துந்துபி — தேவர்களின் ஒலிக்கருவி.
*அந்தரமகளிர் — வான்மகளிர், தெய்வ மகளிர்.
அந்தரம் (தரு.) — வேறு.
அந்தரம் — வான், வெளி, இடைவெளி, துணையின்மை, காலம்.
அந்தரர் — தேவர்.
அந்தரவனம் — பாழ்ங்காடு.
அந்தரவாசம் — வான இருப்பு.
அந்தரவாணி — வானொலி.
அந்தராத்துமா — உயிர்க்குயிர், உயிர்க்குயிரா யிருப்பவன்.
அந்தராயம் — தீமை, இடையூறு.
அந்தராளம் — நடு, இடையிடம்.

| | |
|---|---|
| அந்தரியாமி | கடவுள், உள்ளிருந்தாள்வோன், உயிர். |
| அந்தரியாமித்துவம் | உள்ளீடாயிருக்குந்தன்மை (சித்.). |
| அந்தரிலம்பகம் | கூர்முக்கோணம். |
| அந்தரிக்ஷம் | வான். |
| அந்தரீபம் | தீவு. |
| அந்தரீயம் | உள்ளாடை. |
| அந்தர், அந்தர்க்கதம் | உள், மறைவு, மறைதல். |
| அந்தர்த்தானம் | மறைவிடம், உள்இடம். |
| அந்தர்ப்பூதம் | உள்ளிருப்பது. |
| அந்தர்முக மானசிக விசாரணை | உண்முக அறிவாராய்ச்சி. |
| *அந்தர் முகம் | உண்முகம். |
| அந்தர் யாகம் | உள்வழிபாடு, அகவழிபாடு. |
| அந்தன் | அழகன், குருடன். |
| அந்தாதி | இறுதிமுதல், கடைமுதற்றொடர் நிலை. |
| அந்தி | முடிவு, மாலைக்காலம். |
| அந்திகம் | அயல். |
| அந்தி சந்தி | காலைமாலை, எப்போதும். |
| அந்திய கருமம் | சாவுச்சடங்கு, இழவுச்சடங்கு. |
| அந்தியகாலம் | முடிவு காலம், இறுதிக்காலம். |
| அந்திய கிரியை | இறுதிச் சடங்கு. |
| அந்தியசன் | இழிகுலத்தான். |
| அந்தியம் | முடிவு, சாவு. |
| அந்தியேட்டி, அந்தி யேஷ்டி | சாவுச் சடங்கு. |
| அந்துகம் | யானைச் சங்கிலி. |
| அந்தேவாசி | மாணவன். |

அந்நசாரம் — கஞ்சி, உணவின்வடிபால்.
அந்நசாலை — உணவளிக்கும் இடம்.
அந்நதாதா — உணுக் கொடையாளி.
அந்நதானம் — சோற்றுக்கொடை, உணுக் கொடை.
அந்நதோஷம் — சோற்று வெறுப்பு, உணு வெறுப்பு.
அந்ந பானம் — சோறுந் தண்ணீரும்.
அந்நமய கோசம் — சோற்றாலான யாக்கை, சோற்றுடம்பு.
அந்நம் — சோறு, உணவு.
அந்நரசம் — உணவின் தெளுநீர்.
அந்நாகாரம் — சோற்றுணவு.
அந்நியகமம் — பிறவற்றுற் செல்வது
அந்நியத்துவம் — வேறாயிருக்குந் தன்மை.
அந்நியநாத்தி — வேறன்மை.
அந்நியபுட்டம் — குயில்.
அந்நியர் — பிறர், அயலார்.
அந்நியம், அந்யம் — அயல், வேறு, வேற்றுமை, பிறிது.
அந்நியாதீநன் — பிறருக்குக் கீழ்ப்பட்டிருப்பவன்.
அந்நியோந்நியம் — நெருக்கம், ஒற்றுமை, ஒருவர்க் கொருவர்.
அந்நியோந்நியாபாவம் — ஒன்றிலொன்றின்மை (தரு.).
அந்நுவயம் — உடம்பாடு, கொண்டு கூட்டு, சேர்க்கை, சொல்லியைபு, பொருள்கோள்.
அந்நுவயி — சேர்க்கையுடையது.

அபகரணம் கவர்தல், பறித்தல், தீயொழுக்கம்.
அபகரித்தல் கவர்தல், கொள்ளையிடல், பறித்தல், வவ்வல்,
அபகருமம் பொல்லாங்கு, தீச்செயல்.
அபகாசம் வீண்சிரிப்பு.
அபகாதம் அடித்தல், கொல்லல்.
அபகாரம் தீங்கு, பொல்லாங்கு, நன்றியில்செயல்.
அபகாரி நன்றி கெட்டவன், தீயவன்.
அபகிருதி எதிரிடை, தீச்செயல்.
அபகீர்த்தி பழிப்பு, வசை, இகழ்ச்சி.
அபக்கியாதி பழி, இகழ்ச்சி, புகழின்மை.
அபக்குவம் தகுதியின்மை.
அபக்குவர் தகுதியற்றோர்.
அபங்கம் பழுதின்மை.
அபசகுனம் தீக்குறி, கெட்டகுறி.
அபசதர் கீழ்மக்கள்.
அபசதம் கீழ்மை.
அபசத்தம் அமங்கலமொழி.
அபசயம், அபஜயம் தோல்வி.
அபசரணம் பின்னிடுகை.
அபசரிதம் தீயவரலாறு.
அபசவ்வியம் வலப்பக்கம்.
அபசிதம் குறைக்கப்பட்டது.
அபசாரம் தீச்செய்கை, தீயொழுக்கம், குற்றம், குறைவு, இழிவு.
அபசாரி வேசி, ஒழுக்கமிலாள்.
அபட்சியம் உண்ணத்தகாதது.
அபட்டம் யானைத்தோட்டியின் நுனி.

| | |
|---|---|
| அபதானம் | நன்கு முற்றுப்பெற்ற தொழில். |
| அபதார்த்தகம் (தரு.) | பொருட்போலி கூறுதல். |
| அபதூறு, அவதூறு | பழிச்சொல். |
| அபதேவதை | பேய். |
| அபத்தம் | தவறு, பொய். |
| அபநயம் | அகற்றல். |
| அபமம் | கீழ்க்கதி. |
| அபமரணம், அபமிருத்து | தகாச்சாவு, முதிராச்சாவு. |
| அபமார்க்கம் | தகாவழி, கெட்டவழி. |
| அபமானம், அவமானம் | மானக்கேடு, புகழின்மை, இழிவு. |
| அபயகரம் | அஞ்சேலென் றருளுங்கை. |
| அபயதானம் | அஞ்சேலென்றல். |
| அபயமிடல் | முறையிடல். |
| அபயம் | அடைக்கலம், அச்சமின்மை, அஞ்சேலெனல், புகலிடம். |
| அபயஸ்தம், அபயாஸ்தம் | அஞ்சேலென் றருளுங்கை. |
| அபயர் | மறவர். |
| அபயவாக்கு | அஞ்சேலெனுஞ் சொல். |
| அபயன் | அச்சமறுப்போன், ஆண்டகை, சோழன், கடவுள். |
| அபரகாத்திரம் | கால், பின்கால். |
| அபரசன் | பின் பிறந்தோன். |
| அபரஞானம் | கருவியறிவு, நூலறிவு. |
| அபரஞ்சி | புடமிட்டபொன், மாற்றுயர்ந்த பொன். |
| அபரதி | ஒழிகை. |
| அபரத்துவம் | பின்மை (தரு.) |

| | |
|---|---|
| அபரநாதம் | எதிரொலி. |
| அபரபக்கம் | தேய்பிறை. |
| அபரபட்சம் | எதிர்ப்பக்கம், பிறர்பக்கம். |
| அபரபுத்தி | பின்னறிவு. |
| அபர முத்தி | கீழ்நிலை வீடுபேறு. |
| அபரம் | பின், மேற்கு, கீழ், (தர்க்கத்தில்-அபரசாமானியம்- என்பதிலுள்ள 'அபரம்' என்பது 'குறைவு' என்னும் பொருளது, சிறுபான்மை.) |
| அபரர் | கீழ்ப்பட்டவர். |
| அபரவயசு | முதிர்ந்த அகவை |
| அபராதம் | ஒறுப்புக்கட்டணம், குற்றம், பிழை. |
| அபராதி | தீங்குசெய்கிறவன். |
| அபராந்நம், அபராஹ்நம் | பிற்பகல். |
| அபரிச்சிந்நத்துவம் | கண்டஞ் செய்யப்படாத தன்மை. |
| அபரிதம் | அளவற்றது. |
| அபரிமாணம் | அளவின்மை. |
| அபரிமிதம் | அளவின்மை. |
| அபரியந்தம் | மட்டில்லாமை, எல்லையற்றது. |
| அபரூவம் | அருமை, அழகின்மை. |
| அபரோட்சஞானம் | மெய்யறிவு. |
| அபலம் | பயனற்றது. |
| அபவர்க்கம் | வீடுபேறு. |
| அபவாதம் | பழிச்சொல், ஒவ்வாச்சொல், குற்றச்சாட்டு. |
| அபவித்தன் | அகற்றப்பட்டவன். |

| | |
|---|---|
| அபவியயம் | அளவுக்கு மேற்பட்டசெலவு. |
| அபவிருத்தி | குறைவு. |
| அபஸ்வரம் | இசையின்மை. |
| அபாகம் | முதிராமை. |
| அபாக்கியம் | செல்வமின்மை, வறுமை. |
| அபாங்கதரிசனம் | கடைக்கண் பார்வை. |
| அபாசங்கம் | எலும்புக் கூடு. |
| அபாசம் | குற்றம், அவாவின்மை. |
| அபாடணம் | பேச்சின்மை. |
| அபாண்டம் | பெரும்பொய், பெரும்பழி, இடுபழி. |
| அபாத்திரன் | தகுதியற்றவன். |
| அபாயகரம் | இடர்ப்பாடு. |
| அபாயம் | பேரிடர், அழிவு, கேடு, துன்பம், இடுக்கண், இக்கட்டு. |
| அபாரம் | அளவின்மை, கேடு. |
| அபார்த்தம் | பொருளற்றது. |
| அபாவநம் | பிறப்பு. |
| அபாவப் பிரமாணம் | இன்மை அளவை (சித்.). |
| அபாவம் | இன்மை (தரு.) |
| அபானம் | மலவாய், எருவாய் (திருமூலர்.) |
| அபானன் | மலக்கால். |
| அபிகமநம் | அண்மையிற் போதல். |
| அபிகாதம் | அடித்தல். |
| அபிகிதம் | சொல்லப்பட்டது. |
| அபிசந்தானம் | அணுப்புதல். |
| அபிசரன் | தோழன். |
| அபிசாரம் | தீமையை உண்டுசெய்யும் மறை. |

| | |
|---|---|
| அபிசாரி | வேசி. |
| அபிஞ்ஞர் | அறிந்தவர். |
| அபிஞ்ஞானம் | அடையாளம். |
| அபிடேகம், அபிஷேகம் | திருமுழுக்கு, நீரணிவிழவு, புதுப்புனலாட்டு. |
| அபிதானம் | பெயர். |
| அபிநந்தை | விருப்பம். |
| அபிநயம் | உள்ளக் குறிகாட்டல், கைமெய் காட்டல், கூத்து, நடிப்பு. |
| அபிநயர் | கூத்தர், நடிப்போர். |
| அபிநயித்தல் | உள்ளக்குறி காட்டல், நடித்தல். |
| அபிநவம் | புதுமை. |
| அபிந்நம் | ஒற்றுமை. |
| அபிப்பிராயம் | நோக்கம், எண்ணம், உட்கருத்து, உட்கோள், உள்ளப்போக்கு, கொள்கை. |
| அபிமந்திரித்தல் | உருவேற்றல். |
| அபிமான புத்திரன் | வளர்ப்புப் பிள்ளை, எடுப்புப் பிள்ளை. |
| அபிமானம் | பற்று, நேயம், செருக்கு. |
| அபிமானி | பற்றுடையான். |
| அபிமானித்தல் | பற்றுவைத்தல், உயர்த்துக் கூறல். |
| அபிமுகம் | நேர்முகம், முன்னிலை. |
| அபியுத்தம் | கடிந்துகொள்ளப்பட்டது. |
| அபியுத்தன் | அறிஞன். |
| அபியோகம் | முறையீடு. |

| | |
|---|---|
| அபிராமம் | அழகு. |
| அபிராமி | அழகி, மலைமகள் |
| அபிரூபன் | காமவேள், சிவன். |
| அபிலாசம் | விருப்பம். |
| அபிவியஞ்சகர் | வெளிப்படுத்துவோர். |
| அபிவிருத்தி | பெருக்கம், வளர்ச்சி, ஆக்கம். |
| அபின்னம் | ஒற்றுமை, வேருகாதது. |
| அபின்னசத்தி | பிரிவிலாற்றல், (சித்.). |
| அபிஷதம் | மருந்து. |
| அபீடங்கம் | வைதல். |
| அபீட்டியம் | போற்றத்தக்கது. |
| அபீஷ்டம் | மிகுவிருப்பம், எண்ணம். |
| அபீதி | அச்சமின்மை. |
| அபுத்தி | அறியாமை. |
| அபுத்திபூர்வ புண்ணியம் | அறியாது செய்த அறம். |
| அபூதம் | இன்மை, நிகழாதது. |
| அபூர்வம், அபுருவம் | அருமை, அரியபொருள். |
| அபூர்வ வஸ்து | முன்னில்லாத பொருள், அரியபொருள். |
| அபேட்சை | அவா, விருப்பம். |
| அபேதம் | வேற்றுமையின்மை, ஒற்றுமை, வேறன்மை (சித்). |
| அபேதவாதி | கடவுளும் உயிரும் ஒன்றென்போன் (சித்.) |
| அபோச்சியம் | உண்ணத்தகாதது. |
| அபோதம் | அறியாமை. |
| அபோதார்த்தம் | மாறுபாட்டுரை. |
| அப்தசதம் | நூறாண்டு. |

| | |
|---|---|
| அப்தம் | யாண்டு. |
| அப்தா, ஹப்தா | கிழமை. |
| அப்பியங்க ஸ்நானம், அப்பியங்கனம் | எண்ணெய் முழுக்கு. |
| அப்பியர்ச்சனம் | வழிபாடு. |
| அப்பியாசம் | பழக்கம், பயிற்சி. |
| அப்பியாதானம் | துவக்கம். |
| அப்பியுட்சணம் | மூடுதல். |
| அப்பிரகாசம் | இருள், விளக்கமில்லாதது. |
| அப்பிரசன் | பிள்ளையில்லாதவன். |
| அப்பிரசித்தம் | விளக்கமின்மை, வெளிப்படாதது. |
| அப்பிரதட்சிணம் | இடப்புறச்சுற்று, இடப்பக்கச் சுற்று. |
| அப்பிரதானம் | முதன்மையற்றது. |
| அப்பிரதிபை | அறிவின்மையைக் காட்டுதல் (தரு.), திகைத்தல். |
| அப்பிரமாணம் | பொய், அளவிற்குட்படாதது, மேற்கோளல்லாதது. |
| அப்பிரமாணிக்கன் | பொய்யன். |
| அப்பிரமேயம் | அளவையாலறியப்படாதது, அளவிடப்படாதது. |
| அப்பிரமை | பொய்யறிவு. |
| அப்பிராகிருதம் | மேலானது. |
| *அப்பிராத்தகாலம் | முறைதவறிப் பேசுதல், (தரு.). |
| அப்பிராணி | ஏழை, கரவிலான், உயிரில்லாதது, வலியற்றது, பேதை. |

| | |
|---|---|
| அப்பிரீதி, அப்ரீதி | வெறுப்பு. |
| அப்பு | நீர், புனல். |
| அமங்கலம் | தீமை, நலமின்மை, மகிழ்வின்மை. |
| அமங்கலி, அமங்கலை | கைம்பெண், அறுதலி. |
| அமதம் | அறியப்படாதது. |
| அமயம் | காலம். |
| அமரகிரியை | சாவுச்சடங்கு, இழவுச் சடங்கு. |
| அமரதை | அழிவின்மை. |
| அமரத்துவம் | அழிவின்மை. |
| அமரம் | கண்ணோய். |
| அமரர் | வானோர், தேவர், விண்ணவர். |
| அமராங்கனை | தெய்வப்பெண். |
| அமராபதம் | வானுலகு. |
| அமராவதி | வானவர்கோன் தலைநகர். |
| அமரேசுவரன் | இந்திரன். |
| அமலம் | புனிதம், அழுக்கின்மை, தெளிவு. |
| அமலன் | தூயோன், கடவுள், வாலறிவன். |
| அமல்தார் (இந்துஸ்.) | அரசிறை வாங்குவோன். |
| அமாத்தியன் | அமைச்சன். |
| அமாவாசியை, அமாவாசை | புதுப்பிறை, பிறையுவா. |
| அமிசம் | பங்கு, நேர்மை, பெருவாழ்வு, நல்வினை, கூறுபாடு. |
| அமிதம் | மிகுதி, அளவின்மை. |
| அமித்திரர் | பகைவர். |

| | |
|---|---|
| அமிர்தகலை | நிலவு, நிலாக்கதிர். |
| அமிர்த கிரணன் | நிலவு, தண்கதிரோன். |
| அமிர்த சஞ்சீவி, அமிர்தசஞ்சீவினி | உயிர்தரு மருந்து. |
| அமிர்தசத்து | தேம்பொருள். |
| அமிர்ததரங்கிணி | நிலவு. |
| அமிர்தம், அமிருதம் | சாவாமருந்து, இனிமை, அழிவின்மை, அருமருந்து, வானோர் உணவு, சோறு. |
| அமிர்தமயம் | பொன்வடிவு, இன்பநிறைவு. |
| அமிர்தயோகம் | நற்பொழுது, நல்வேளை. |
| அமிர்த ரூபம் | இன்பவடிவம். |
| அமிர்தவல்லி | சீந்திற்கொடி. |
| அமிர்தவாயு | தூயகாற்று. |
| அமிர்தாசநர் | தேவர். |
| அமுதகுலர் | இடையர். |
| அமுததி | பாற்கடல். |
| அமுதம் | நீர். |
| அமுதன் | அழிவிலான், இனியன். |
| அமுது | சோறு, அடிசில், இனிமை. |
| அமுல் (இந்துஸ்) | ஆட்சி. |
| அமூர்த்தம் | உருவமின்மை. |
| அமூர்த்தன், அமூர்த்தி | உருவிலான். |
| அமூலம் | ஏதுவின்மை. |
| அமேத்தியம் | அழுக்கு, துப்புரவின்மை, மலம், பவ்வீ. |
| அமோகம் | மிகுதி, பெருக்கம். |
| அம்சம் | வகை, அன்னப்புள், காலம், எண், பங்கு. |

| | |
|---|---|
| அம்பகம் | கண். |
| அம்பரமணி | கதிரவன். |
| அம்பரம் | வெளி, வான், ஆடை. |
| அம்பராம்புயம் | வானத்தாமரை. |
| அம்பா | அம்மை, தாய், இறைவி. |
| அம்பாயம் | துன்பம். |
| அம்பாரம் | குவியல். |
| அம்பாரி | யானைமேலிருக்கை. |
| அம்பிகாபதி | சிவன். |
| அம்பிகை | தாய், அம்மை. |
| அம்பிகைதநயன் | முருகன், பிள்ளையார், உமை மகன். |
| அம்புசம், அம்புயம் அம்புஜம் | தாமரை. |
| அம்புதி | கடல். |
| அம்புயன் | நான்முகன். |
| அம்புயாகம் | தாமரை. |
| அம்புயாசனம் | தாமரை யிருக்கை. |
| அம்புராசி | கடல். |
| அம்போசன் | திங்கள். |
| அம்போதரம் | முகில். |
| அம்போருகம் | தாமரை. |
| அயக்காந்தம் | இரும்பிழுக்கி. |
| அயக்ரீவன், அயக்ரீவகன், | திருமால். |
| அயச்செந்தூரம் | இரும்புச்செந்தூள். |
| அயதண்டம் | இரும்புத்தடி. |
| அயதார்த்தம் | பொய். |
| அயநம், அயனம், | வழி. |

| | |
|---|---|
| அயபற்பம், அயபஸ்பம் | இரும்பு வெண்ணீறு. |
| அயமேதம் | ஆட்டு வேள்வி. |
| அயம், அஜம் | ஆடு, இரும்பு, குதிரை |
| அயன் | நான்முகன். |
| அயிக்கவாதி | ஒற்றுமைக் கொள்கையன் (சித்.) |
| அயிக்கியம், அயிக்கம் | ஒற்றுமை, ஒன்றிப்பு. |
| அயிங்கிதை | கொல்லாமை. |
| அயிச்சுவரியம் | செல்வம். |
| அயிராணி | வானவர்கோன் மனைவி, இறைவி. |
| அயிராவணம், அயிராவதம் | வெள்ளையானை, கீழ்பால் யானை. |
| அயினம், அசினம் | மான்தோல். |
| அயுக்தம் | தகாதது. |
| அயுதம் | பதினாயிரம். |
| அயோகன் | தாரம் இழந்தவன். |
| அயோக்கிதை, அயோக்கியம் | தகுதியின்மை, தகாதது. |
| அயோக்கியன் | தகுதியற்றவன், தகவிலான், கெட்டவன். |
| அயோசநம் | ஒன்றுதலின்மை. |
| அயோனிசம் | பிறவாமை. |
| †அய்மாசு (இந்து.) | ஆராய்ச்சி. |
| அரங்கபூமி | நாடகசாலை, போர்க்களம். |
| *அரசங்கம் | அரசுறுப்பு, அமைச்சு. |

| | |
|---|---|
| அரசச்சின்னம் | அரச அடையாளம். |
| அரசம் | சாரமில்லாதது. |
| அரசாங்கம் | அரசியல். |
| *அரசிகம் | சுவையின்மை. |
| அரசுநீதி | அரசுமுறை, செங்கோன்மை. |
| அரண்ணியசடகம் | காட்டுக் குருவி. |
| அரணியம் | காடு. |
| அரணியாநி | பெருங்காடு. |
| அரதனம் | சிலம்பணி, மணி. |
| அரதனவடம், ரத்தினவடம் | ஒளிமணி மாலை. |
| அரத்தன் | அவாவில்லாதவன். |
| அரத்தம் | சிவப்பு, குருதி. |
| அரத்தோற்பலம் | செங்கழுநீர், செங்குவளை. |
| அரத்தினம், ரத்தினம் | ஒளிமணி, அகன்மணி. |
| அரமியம் | நிலாமுற்றம். |
| அரம்பை, ரம்பை | தெய்வப்பெண், அரிவை, வான்மகள். |
| *அரவம் | ஒலி, பாம்பு. |
| அரவிந்தம் | தாமரை, முளரி. |
| அரவிந்தாக்கன் | திருமால். |
| அரவிந்தன் | நான்முகன். |
| அரவிந்தை | தாமரை, திருமகள். |
| அராகம் | அவா, விருப்பம், (சித்-தத்), பண், ஓசை, |
| அராதி | பகைவன். |
| அராத்திரி | கைலைமலை. |
| அராபதம் | வண்டு. |
| அராமம் | சோலை. |

| | |
|---|---|
| அராமி | கெட்டவன், கெட்டவள். |
| அராமை | கீழ்மகள். |
| அராலம் | வளைந்தது, கொடுவாள். |
| அராலை | நாட்டியப்பெண். |
| அராவணம் | புலம்பாமை. |
| அராவைரி | கருடன். |
| அரி, ஹரி | சிவன், பகலவன், திருமால், நிறம், புகை. |
| அரிகண்டம் | துன்பம், இடைஞ்சல். |
| அரிகரபுத்திரர் | ஐயனார். |
| அரிசரன் | திருமாலை அம்பாகக்கொண்ட சிவன். |
| அரிசனம், ஹரிசனம் | மஞ்சள். |
| அரிட்டம், அரிஷ்டம் | கேடு, தீங்கு. |
| அரிதினம் | (ஏகாதசி) திருமால் நாள். |
| அரிநாதம் | சிங்க முழக்கம். |
| அரியாசனம் | அரசிருக்கை, வேந்திருக்கை, அரியணை. |
| *அருகதை | தகுதி. |
| *அருகன் | தக்கவன். |
| அருக்கம், அர்க்கம் | பொன், கூலவிலை, நெருப்பு. |
| அருக்கன் | பகலோன், வெய்யோன். |
| அருக்கியம், அர்க்கியம் | நீராற் செய்யும் வழிபாடு, திருவடிகழுவுதல், நீர்வார்த்தல். |
| அருச்சகன், அர்ச்சகன் | கோவிற்பட்டன், வழிபாடாற்றுவோன். |
| அருச்சனை, அர்ச்சனை | பூவழிபாடு, மலர்தூவழிபாடு. |

| | |
|---|---|
| அருச்சிதம் | வழிபாடு. |
| அருச்சித்தல், அர்ச்சித்தல் | மலர்தூவல், வழிபடல், பூத்தூவல். |
| *அருட்சத்தி(சித்தி.) | அருளாற்றல், இறைவி. |
| *அருட்சோதி | அருளொளி, கடவுள். |
| அருணம் | சிவப்பு. |
| அருணலோசநம் | சிவந்தகண்ணுடையது. |
| அருணவம் | கடல். |
| அருணன் | கதிரோன், செஞ்சுடர். |
| அருணாசலம், அருணகிரி | திருவண்ணாமலை. |
| அருணோதயம் | வைகறை, விடியல், கதிரோன் வருகை. |
| அருத்தகங்கை | காவேரி. |
| அருத்த சந்திரன், அர்த்த சந்திரன், | இளம்பிறை, பாதிநிலா. |
| அருத்த சாமம், அர்த்த சாமம், அருத்த நிசா | நள்ளிரவு, நள்யாமம். |
| அருத்த நாரீசன், அர்த்தநாரீசுரன், அர்த்த நாரீசுவரன் | உமையொருபாகன், மாதிருக்கும்பாதியன், மங்கைபங்கன். |
| அருத்த பாகம் | பாதிப்பங்கு. |
| அருத்தம், அர்த்தம் | பொருள், பாதி. |
| அருத்தவாதம் | புனைந்துரை. |
| அருத்தாந்தரம், அர்த்தாந்தரம் | கருத்துப் பிரிவு, வேறு பொருள் கூறுதல். |

| | |
|---|---|
| அருத்தாபத்தி (தரு.) | பொருளளவை, பொருள் பெறுதல். |
| அருத்தாபத்திப் பிரமாணம் | பொருட்குறிப்புள்ளது, பொருளளவை (தரு.). |
| அருத்தி | அவா, விருப்பம். |
| அருந்ததி | வடமீன், கடவுள்மீன். |
| *அருவமேனி | நுண்ணுடம்பு. |
| அருவம் | உருவின்மை, அழகின்மை. |
| அரூபம் | உருவற்றது. |
| அரூபி | உருவிலி சிவன். |
| அரேசிகம் | வாழை. |
| அரோகம் | நோயின்மை. |
| அரோசம், அரோசகம், அரோசிகம், அரோசனம் | சோற்று வெறுப்பு, அருவருப்பு, வாயாலெடுப்பு, ஊண் வேண்டாமை. |
| அர்க்கன் | செஞ்சுடர். |
| அர்ச்சனம், அர்ச்சுனம் | பொன். |
| அர்த்தகம் | பொருளுடையது. |
| அர்த்தசந்திர பாணம் | பிறைமுகக் கணை. |
| அர்த்தசாமம், அர்த்தராத்திரி | நள்ளிரவு. |
| அர்த்தசாரம் | பொருட் சிறப்பு. |
| அர்த்த நாசம் | பேறழிவு, பொருளழிவு. |
| அர்த்த புஷ்டி | பொருட்செறிவு. |
| அர்த்தாட்சி | பக்கப்பார்வை. |
| அர்த்தாலங்காரம் | பொருளணி. |

| | |
|---|---|
| அர்ப்பணம் | நீரொடு கொடுத்தல், உரிமைப் படுத்தல், ஒப்புவித்தல். |
| அர்ப்பிதம் | கொடுக்கப்பட்டது. |
| அலங்கம் | மதிலுறுப்பு. |
| அலங்காரம் | அழகு, ஒப்பனை, அணி, புனைவு. |
| அலட்சியம் | பொருட்படுத்தாமை, பராமுகம், கருத்தின்மை. |
| அலத்தம், அலத்தகம் | செம்பஞ்சுக் குழம்பு. |
| அலந்தம் | மெய்யீறு. |
| அலப்பியம் | அடையக்கூடாதது. |
| †அலமாரி (அரபி.) | நிலைப்பேழை. |
| அலம், ஹலம் | கலப்பை, அமைவு. |
| அலயம் | ஒடுங்காமை. |
| அலயன் | அழிவிலான். |
| அலாரம் | கதவு. |
| அலுப்தசத்தி | பேரருளுடைமை (சித்.). |
| †அலுப்பிணுத்தி (அரபி.) | குண்டூசி. |
| †அலுவா, ஹல்வா | கோதுமைத் தேம்பாகு. |
| அலௌகிகம் | உலகியற்கு மாறுபாடு. |
| அல்லோலகல்லோலம் | பேராரவாரம். |
| அவ, அப | இன்மை, எதிரிடை, கெட்ட. |
| அவகடம் | கீழ், வஞ்சகம், எதிராயது. |
| அவகண்டனம் | அழித்தல், களைதல். |

அவகரணம் கொள்ளை, பறித்தல், மீட்டல்.
அவகாசம் ஒழிவு, ஒய்வு.
அவகாரன் கள்ளன்.
*அவகாலம் கெடுகாலம், வீண்பொழுது.
அவகிருத்தியம் தீச்செய்கை.
அவகீதம் வசைப்பாட்டு, இழுக்குடைய பாட்டு.
அவகீர்த்தி இழிவு, புகழின்மை.
*அவகுணம் தீய இயல்பு.
அவக்கியாதி வசை, இகழ்ச்சி.
அவக்கிராந்தி இறங்குதல்.
அவசகுனம் தீக்குறி, கெட்ட குறி.
அவசத்தம் இன்னாவோசை, தீங்கொலி.
அவசம் தன்வசப்படாமை.
அவசயம், அபசயம் தோல்வி.
அவசரபேதம் பொழுது வேறுபாடு.
அவசரம் விரைவு, பரபரப்பு, சுருக்கு, பதைப்பு.
அவசாரணம் நடத்துதல்.
அவசாரம், அபசாரம் தீச்செய்கை, புறம்போதல்.
அவசித்தாந்தம் பயனில் முடிவு.
அவசியம் முதன்மை, கட்டாயம், இன்றியமையாமை.
அவசீநம் தேள்.
அவசுத்தம் துப்புரவின்மை.
அவசேடம் எஞ்சியது.
அவச்சின்னம் பிரிவு, பிரித்தறியப்பட்டது.
அவச்சேதம் பிரிவு, வரையறுத்தல்.

| | |
|---|---|
| அவச்சேதனம் | பகுத்தறிதல், களைதல். |
| அவட்சேபம் | எறிதல். |
| அவதந்திரம் | தகுதியற்ற வழியால் ஒன்று செய்தல். |
| அவதரம் | தறுவாய். |
| அவதரித்தல் | பிறத்தல். |
| அவதாரம் | பிறப்பு, இறங்குகை. |
| அவதாரிகை | முன்னுரை. |
| அவதானம் | எச்சரிக்கை, ஒழிவு, நினைவு, விரித்தல், மறப்பின்மை, |
| அவதி | தவணை, துன்பம், வருத்தம், அளவு, எல்லை, முடிவு. |
| அவதிஞானம் | முக்காலத்தையும் அறியும் அறிவு, முற்பிறப்பையறியு மறிவு, பிறப்பிறப்பையறியு மறிவு. |
| அவதூதம் | முழுத்துறவு, அசைக்கப்பட்டது. |
| அவத்தம், அபத்தம் | பொய், தவறு. |
| அவத்திரியம் | இடையூறு, துன்பம். |
| அவத்தை, அவஸ்தை | நிலை, துன்பம், நிலைமை. |
| அவநம்பிக்கை | நம்பிக்கைக் குறை. |
| அவநி, அவனி | நிலம், வையகம். |
| அவநிந்தை | பழிதூற்றல். |
| அவநிபதி, அவநிபன் | அரசன். |
| அவநிபாரகன், அவநிபாலன் | அரசன். |

| | |
|---|---|
| அவஙியாயம், அவநீதி | முறையின்மை. |
| அவநீதன் | ஒழுக்கமிலான். |
| அவந்தன் | வீணன். |
| அவந்திகை | கிளி. |
| அவபாசம் | அறிவு. |
| அவபாசன் | விளக்குகிறவன். |
| அவபுத்தி | கெட்ட நினைவு, தீய அறிவு. |
| அவப்பிரசவம் | இடையிற்கருவீழ்தல். |
| அவமரணம் | தகாச்சாவு, இளஞ்சாக்காடு. |
| அவமரியாதை | வணக்கமின்மை, தீயமுறை, முறை தவறல். |
| அவமானம் | மானக்கேடு, இழிவு, குறைவு, இளிவரவு. |
| அவமோசனம் | விடுதல், விடுதலையாக்கல். |
| அவம் | தீமை, கேடு, வீண். |
| *அவயமிடல், *அபயமிடல் | முறையிடல். |
| அவயம், அபயம் | அழுகை, அடைகாத்தல். |
| அவயவம், அவையவம் | உறுப்பு. |
| அவயவி | உடல், முதல். |
| அவயோகம் | தீயநிகழ்ச்சி, பொல்லாங்கு. |
| அவரசை | தங்கை. |
| அவரம் (தரு.), அபரம் | பின். |
| அவரோகி | ஆலமரம். |
| அவாங்க மனோ கோசரம் | மனமொழிகட்கு எட்டாதது. |

| | |
|---|---|
| அவரோகணம், அவரோபணம் | இறங்குதல், இறங்குகை. |
| அவலக்கணம், அவலட்சணம் | அழகின்மை. |
| அவலம் | கேடு, குற்றம், மிடி, சோர்வு, பயனின்மை, வீண். |
| அவலம்பனம் | பிடிப்பு. |
| அவலம்பித்தல் | சார்ந்துநிற்றல், பற்றுதல். |
| அவலன் | உடற்குறையன், வீணன். |
| அவலேசம் | சிறிது. |
| அவலோகம், அவலோகனம் | பார்வை. |
| அவாசி | தெற்கு. |
| அவாந்தரம் | அழிவு, உதவியின்மை, வெறுவெளி, இடை. |
| அவி | தேவருணவு. |
| அவிகசிதம் | மலராதது. |
| அவிகடம் | ஆட்டுக்கூட்டம். |
| அவிகற்பம் | வேறுபாடின்மை. |
| அவிக்கிநம் | இடையூறின்மை, மாறின்மை. |
| அவிகாரம் | மாறுதலின்மை, இயற்கை, எழுவாய். |
| அவிகாரி | கடவுள், மாறுதவன் |
| அவிசு, ஹவிசு | தூயஉணவு, உப்பின்றிச் சமைத்த பச்சரிசி உணவு, சோறு, நெய். |
| அவிசாரம் | கவலையின்மை. |
| அவிசுவாசம் | நன்றியின்மை. |
| அவிசேடம் | சிறப்பல்லாதது. |

| | |
|---|---|
| சலப்பிரியம் | மீன், சாதகப்புள். |
| சலமூர்த்தி | சிவன். |
| சலம் | அசைவு, நீர். |
| சலருகம் | தாமரை. |
| சலவாலிகை | மின்னல். |
| சலாகை | அம்பு, ஈட்டி. |
| சலாசயம் | நீர்நிலை. |
| சலிலம் | மலை. |
| சலேசரம் | நீர்ப்புள், மீன். |
| சல்லாபம் | உரையாடல். |
| சவக்கிரியை | பிணச்சடங்கு. |
| சவம் | பிணம். |
| சவிகற்பக்காட்சி | வேற்றுமைக்காட்சி. |
| சவிஸ்தாரம் | விரிவு. |
| சவிதா | கதிரவன். |
| சவுகரியம், சௌகரியம், சவுக்கியம், சௌக்கியம் | நலம். |
| சவுசந்நியம் | அன்பு. |
| சவுந்தரி | உமை. |
| சவுந்தரியம், சௌந்தரியம், சவுந்தரம் | அழகு. |
| சவுபாக்கியம், சௌபாக்கியம் | செல்வம். |
| சவுளம் | மயிர்களைதல். |
| சவ்வியை | தெற்கு, மிளகு. |
| சற்கருமம் | நற்றொழில். |

| | |
|---|---|
| சற்காரியம் | உள்பொருளினின்று தோன்றும் வினை. |
| சற்காரியவாதம் | உள்பொருளினின்று வினை தோன்றுமெனும் வழக்கு. |
| சற்கிருதம், சற்கிருதி | நல்லொழுக்கம், நற்றொழில். |
| சற்குணம் | நல்லியல்பு. |
| சற்குணன் | நல்லியல்பினன், நல்லான். |
| சற்குரு | மெய்க்குரவன். |
| சற்பகன் | அலட்டுவோன், பிதற்றுவோன். |
| சற்பாத்திரம் | ஒழுக்கமுடையார். |
| சற்புத்திரன் | நன்மகன். |
| சனசங்காத்தம் | மக்கள்கூட்டுறவு. |
| சனசமூகம் | மக்கட் கூட்டம். |
| சனம், ஜனம் | மக்கள். |
| சனனம், சனிப்பு, சன்மம் | பிறப்பு. |
| சன்மார்க்கம் | நன்னெறி. |
| சன்மானம் | பரிசு. |
| சன்னி, ஜன்னி | இசிவு. |

### சா

| | |
|---|---|
| சாகசம் | ஆற்றல், துணிவு, நெருக்கிடை, வலுகட்டாயம். |
| சாகசரியம் | தோழமை. |
| சாகரம் | கடல். |
| சாகாமிருகம் | குரங்கு. |

| | |
|---|---|
| சாகித்தியம் | கூடியிருக்குந்தன்மை, புலமை. |
| சாகுபடி (இந்து.) | பயிர்செய்தல். |
| சாகை, ஜாகை } (உருது) | தங்குமிடம், வீடு, இல்லம். |
| சாக்கியம் | கூட்டம். |
| சாக்கிரதை, ஜாக்கிரதை } | விழிப்பு, உன்னிப்பு, எச்சரிக்கை. |
| சாக்கிரம் | நனவு, விழிப்புநிலை, ஜாக்கிரம். |
| சாங்கம் | உறுப்பு, உறுப்போடுகூடியது. |
| சாங்கரியம் | கலப்பு. |
| சாங்கலிகன் | நஞ்சுமருத்துவன். |
| சாங்கியம் | பகுத்தறிதல். |
| சாங்கோபாங்கம் | எல்லாம். |
| சாசனம் | உறுதிப்பத்திரம், முறி. |
| சாசுவதம் | அழியாமை, அசையாநிலை, உறுதி, வீடுபேறு. |
| சாடா (இந்து.) | முழுவதும். |
| சாட்சாத்காரம் | கண்கூடு. |
| சாட்சி, சாட்சியம் } | சான்று, கரி. |
| சாஷ்டாங்க நமஸ்காரம் } | எட்டுறுப்பு வணக்கம், நிலந்தோய் வணக்கம். |
| சாதகம் | பயிற்சி, பிறந்தநாட்குறிப்பு, உதவி, காரியங்கைகூடல். |
| சாதகும்பம் | பொன். |
| சாதம் | சோறு. |
| சாதனங்கள் | வழிவகைகள், கருவிகள். |

| | |
|---|---|
| சாதனசாத்தியம் | காரணகாரியம். |
| சாதனம் | கருவி, இடம், பயிற்சி, உறுதி முறி, அடையாளம், முயற்சி கைகூடல். |
| சாதாரண தருமம் | பொதுத்தன்மை. |
| சாதாரணம் | பொது. |
| சாதி, ஜாதி | இனம், குலம், வகுப்பு, மரபு. |
| சாதிதம் | நிறைவேற்றப்பட்டது, ஆராயப்பட்டது. |
| சாதித்தல் | உறுதிப்படுத்தல், நிலைநிறுத்தல். |
| சாதியாசாரம் | குல ஒழுக்கம். |
| சாதியீனன் | குலக்கேடன். |
| சாது | நல்லான், அமைதியாளன், துறவி. |
| சாதுரியம் | திறமை, வன்மை. |
| சாதுருசியம் | ஒப்புமை. |
| சாத்தியந்தன், சாத்தியந்தகன் | பிறவிக் குருடன். |
| சாத்தியம் | உண்மை, முடிக்கப்பட்டது. |
| சாத்திரம், சாஸ்திரம் | கலை, நூல், ஒழுங்கு. |
| சாத்திரவன் | பகைவன். |
| சாஸ்தி, ஜாஸ்தி (அராபி) | மிகுதி. |
| சாஸ்திர சம்பந்தம் | நூற்சார்பு, நூற்றொடர்பு. |
| சாஸ்திரீயம் | நூன்முறை. |
| சாத்மிகம், சாத்துவிகம் | அமைதித்தன்மை (முக்குணத்தொன்று). |
| சாத்மீகி | அமைதியாளன். |

| | |
|---|---|
| சாநித்யம் | அண்மை, முன்னிலை. |
| சாந்தம் | அமைதி, பொறுமை. |
| சாந்திகலை | அமைதிகலை. |
| சாந்தியாதீதகலை | அமைதிமேற்கலை. |
| சாந்திரமானம் | திங்கள் வழியளவை. |
| சாந்திரம் | நெருக்கம், நிறைவு, திங்கட் டொடர்புடையது. |
| சாபம் | தீமொழி, வசவு, வில். |
| சாபல்லியம் | வெற்றி, பயன், பேறு. |
| சாபாநுக்கிரகசத்தி | அழித்தலும் ஆக்கலும் வல்ல ஆற்றல். |
| சாமம் | யாமம். |
| சாமர்த்தியம் | வல்லமை, திறமை, கூறுபாடு. |
| சாமளம் | பச்சை. |
| சாமானியஞானம் | பொதுவறிவு. |
| சாமான் | பொருள்கள், தட்டுமுட்டுகள். |
| சாமான்யம் | பொது (தரு) முழுமை. |
| சாமி, சுவாமி | கடவுள், தலைவன், அடிகள். |
| சாமீப்பியம் | கடவுளருகிருப்பு. |
| சாமுத்திரி காலட்சணம் | உறுப்பிலக்கணம் |
| சாம்பிராச்சியம் | ஆளுகை, நாடு. |
| சாயுச்சியம் | ஒன்றிப்பு. |
| சாயை | நிழல். |
| சாரங்கபாணி | விற்கையன், திருமால். |
| சாரங்கம், சார்ங்கம் | வில், மான். |
| சாரணர் | ஒற்றர், தொண்டர். |
| சாரதன், சாரதி | தேர்ப்பாகன். |

| | |
|---|---|
| சாரதா, சாரதாம்பாள் | கலைமகள். |
| சாரதாபீடம், சரஸ்வதீபீடம் | கலைமகளிருக்கை. |
| சாராம்சம் | சிறந்த பகுதி. |
| சாரித்திரம் | ஒழுக்கம், கதை. |
| சாரீரம் | இனிய குரல், இன்னிசை, உடற்றொடர்பு. |
| சாரூபம் | கடவுளது திருவுருவம் பெற்றிருத்தல். |
| சாலம், ஜாலம் | கண்கட்டு, மாயம், வலை. |
| ஜாலர் | கைத்தாளம், தொங்கட்டம். |
| ஜாலிகர் | நெய்வோர். |
| சாலூரம் | தவளை, மேன்மை. |
| சாவகாசம் | ஒழிவு, ஓய்வு, வசதி, விரைவின்மை. |
| சாவதானம் | ஒழிவு, ஓய்வு, உன்னிப்பு. |

## சி

| | |
|---|---|
| சிகண்டம் | மயிற்றோகை. |
| சிகண்டி | மயில். |
| சிகரம் | தலை, மலை, உச்சி, முகடு, குவடு. |
| சிகரி | மலை. |
| சிகிச்சை, சிகித்சை | மருத்துவம், பரிகாரம். |
| சிகித்சகன், சிகிச்சகன் | மருத்துவன், பரிகாரி. |
| சிகை | குடுமி, கூந்தல். |

| | |
|---|---|
| சிங்கம், சிம்ஹம் | அரிமா, ஏறு. |
| சிங்காசனம், சிம்மாசனம் | அரியணை. |
| சிங்காரம் | ஒப்பனை, திருத்தம், அழகு. |
| சிங்காரவனம் | பூந்தோட்டம், அழகிய தோட்டம். |
| சிசு | குழந்தை, மகவு. |
| சிசுத்துவம் | பிள்ளைத்தன்மை. |
| சிசுவதை, சிசுஹத்தி | பசுங்குழவிக் கொலை. |
| சிக்ஷித்தல் | ஒறுத்தல். |
| சிட்சை, சிக்ஷை | கற்பித்தல், கல்வி பயிற்றல், ஒறுத்தல். |
| சிட்டம், சிஷ்டம் | ஒழுக்கம், நல்வழி, மெய்யறிவு. |
| சிட்டன், சிஷ்டன் | பெரியோன், தக்கோன், சிறந்தோன். |
| சிஷ்யன் | மாணக்கன். |
| சிதடன் | அறிவிலான், குருடன். |
| சிதாகாசவியாபகம் | அருள்வெளிப் பரப்பு. |
| சிதாகாயம் | அருள்வெளி. |
| சித்தசலனம் | உள்ளக்கலக்கம். |
| சித்தசாந்தி | உளஅமைதி, மனவமைதி. |
| சித்தசுத்தி | உளத்தூய்மை. |
| சித்தப்பிரமை | மனக்கோட்டம், உளவேறுபாடு. |
| சித்தம் | உள்ளம், நினைவு, கருத்து. |
| சித்தர் | அறிவர், துறவோர். |
| சித்தவிருத்தி | மனப்பான்மை, உள்ளக்கிடை. |

| | |
|---|---|
| சித்தவேதனை | மனத்துன்பம். |
| சித்தாந்தம் | முடிந்தமுடிவு, செம்பொருட்டுணிவு. |
| சித்தி | பேறு. |
| சித்தித்தல் | கிடைத்தல், வாய்த்தல், கைகூடல். |
| சித்திரபானு | ஞாயிறு, பகலோன். |
| சித்திரம் | ஓவியம், படம். |
| சித்திரவதை | வன்கொலை. |
| சித்து | அறிவு. |
| சிநேகம், சிநேகிதம் | நட்பு, கேண்மை, நேயம். |
| சிநேகிதன் | நண்பன், நேயன், தோழன். |
| சிந்தனுசக்தி | நினைவாற்றல். |
| சிந்தனை, சிந்தை | எண்ணம், கருத்து, நினைவு. |
| சிந்தாக்கிராந்தன் | மனவருத்தம் உடையவன். |
| சிந்தித்தல் | நினைத்தல், உள்ளுதல், கருதல். |
| சிந்து | கடல். |
| சிந்தூரம் | செந்தூள். |
| சிரக்கம்பம் | தலையசைவு. |
| சிரசம் | தலைமயிர். |
| சிரசு, சிரம் | தலை, முதல். |
| சிரஞ்சீவி | நீடுவாழ்வோன். |
| சிரஸ்தம் | நெடுநாள். |
| சிரத்தை | அன்பு, முதன்மை, உளத்திட்பம், விருப்பு. |
| சிரமபரிகாரம் | துன்ப நீக்கம். |

| | |
|---|---|
| சிரமம் | துன்பம், தொல்லை. |
| சிரவணம் | கேட்டல், கேள்வி. |
| சிராத்தம் | இறந்தநாட் கடன். |
| சிரீதனம், ஸ்ரீதனம் | மகட்கொடை. |
| சிரீமத், ஸ்ரீமத் | திருவாளர். |
| சிரீலஸ்ரீ, ஸ்ரீலஸ்ரீ | மறைத்திருவாளர். |
| சிருங்காரரசம் | உவகைச் சுவை. |
| சிருட்டி, சிருஷ்டி | படைப்பு. |
| சிரேஷ்டம் | சிறப்பு. |
| சிரேஷ்டன் | தலைவன், சிறந்தவன். |
| சிலாகித்தல் | புகழ்தல். |
| சிலாக்கியம் | மேன்மை, நன்மை. |
| சிலாதலம், சிலாதனம் | கல். |
| சிலேட்டுமம், சிலேஷ்டுமம் | சளி, கோழை, ஐ. |
| சிவகதி | சிவப்பேறு. |
| சிவத்துவம் | சிவனுந்தன்மை. |
| சிவபக்தி | சிவநேயம். |
| சிவபோதம் | சிவவுணர்வு, மெய்யுணர்வு. |
| சிவபோதபிராப்தி | சிவ அறிவுத்தன்மை பெறல், மெய்யறிவுப்பேறு, வீடுபேறு. |
| சிவப்பிரியம் | கண்மணி. |
| சிவானுபவம் | சிவநுகர்வு. |
| சிவானுபூதிமான்கள் | மெய்த்திருவாளர்கள். |
| சிவிகை | பல்லக்கு. |
| சிற்சத்தி | அறிவாற்றல். |

சிற்பசாஸ்திரம் — கற்றச்சு நூல்.
சிற்பம்,
 சிற்பவித்தை } கற்றச்சு.
சின்மயம் — அறிவு வடிவு, அறிவுரு.
சின்னபின்னம் — உருக்குலைவு.
சின்னம் — அடையாளம்.

## சீ

சீகண்டன்,
 ஸ்ரீகண்டன் } சிவன்.
சீக்கிரம் — விரைவு, ஒல்லை, கடிது.
சீஷன், சீடன் — மாணுக்கன்.
சீர்ணம், க்ஷீணம் — அழிவு, குறைவு.
சீணித்தல்,
 க்ஷீணித்தல். } பயன் குறைதல்.
சீணதசை,
 க்ஷீணதசை } அழிவுகாலம், மழுக்கம்.
சீதநம் — பெண்ணுக்குக் கொடுக்கும் நன்கொடைப் பொருள்.
சீதபேதி — வயிற்றளைச்சல்.
சீதம், சீதளம் — குளிர்ச்சி.
சீதேவி, சிரீதேவி — திருமகள், இளையாள்.
சீதோஷ்ணம் — தட்பவெப்பம்.
சீபலம் — வில்வம்.
சீபாதம், சிரீபாதம் — திருவடி.
சீபாதரேணு — திருவடித்தூள்.
சீமந்தம் — சூல்காப்பிடுஞ் சடங்கு.
சீமந்தபுத்திரன் — தலைமகன்.
சீமந்தினி — பெண்மகள்.
சீமா — எல்லை.

| | |
|---|---|
| சீமான் | செல்வன். |
| சீமுகம், ஸ்ரீமுகம் | திருமுகம். |
| சீமூதம் | நீருண்டமுகில். |
| சீமூதவாகநன் | ஆயிரங் கண்ணன். |
| சீரணம் | செரித்தல், பழுது. |
| சீரம், க்ஷீரம் | பால், நீர். |
| சீர்ணோத்தாரணம் | பழுதுபார்த்தல். |
| சீலம் | ஒழுக்கம். |
| சீவகாருணியம் | உயிர்களிடத்தன்பு, அருள் ஒழுக்கம். |
| சீவகாருணியன் | அருளாளன். |
| சீவசந்து, ஜீவஜெந்து ஜீவப் பிராணி | உயிர்ப்பொருள். |
| சீவபோதம் | தன்னறிவு, உயிரறிவு. |
| சீவபோதநிவர்த்தி | சிற்றறிவுத்தன்மை ஒழிப்பு. |
| சீவப்பிரமவாதம் | உயிரே கடவுளென்னும் வழக்கு. |
| சீவராசி | உயிர்வகுப்பு, உயிர்த்தொகுதி. |
| சீவனம் | பிழைப்பு. |
| சீவனந்தம் | சாக்காடு. |
| சீவனம்சம் | பிழைப்புக்கு வழி. |
| சீவனோபாயம் | பிழைக்கும் வழி. |
| சீவன் | உயிர். |
| சீவன்முத்தர் | மெய்யடியார். |
| சீவாதாரம் | உடல். |
| சீவான்மா | உயிர், சிற்றுயிர். |
| சீவித்தல் | பிழைத்தல். |
| சீவியம், ஜீவியம் | வாழ்நாள், பிழைப்பு, வாழ்க்கை. |
| சீவோற்பத்தி | உயிர்த்தோற்றம். |

## சு

| | |
|---|---|
| சுகசீவனம் | நல்வாழ்க்கை. |
| சுகதுக்கம் | இன்பதுன்பம். |
| சுகதேகம் | நோயில் யாக்கை, நல்லுடல். |
| சுகந்தபுட்பம் | நறுமலர். |
| சுகந்தம், சுகந்தபரிமளம் | நறுமணம். |
| சுகந்தவர்க்கம் | மணப்பண்டம். |
| சுகப்பிரதம் | இன்பந்தருவது. |
| சுகம் | நலம், இன்பம். |
| சுகவீனம் | நலமின்மை, நலக்கேடு. |
| சுகாதாரம் | நலவழி. |
| சுகானுபவம் | நன்னுகர்ச்சி, பேரின்ப நுகர்ச்சி. |
| சுகித்தல் | இன்புறுதல், நுகர்தல், துய்த்தல். |
| சுகிர்தம் | அறம், இன்பம், நன்மை. |
| சுகிர்லாபம் | நட்புப் பேறு. |
| சுகுணம் | நல்லியல்பு, நற்பண்பு. |
| சுக்கிரவாரம் | வெள்ளிக் கிழமை. |
| சுக்கிரன், சுக்கிரபகவான் | வெள்ளி. |
| சுக்கில பக்ஷம், பூர்வ பக்ஷம் | வளர்பிறை. |
| சுக்கிலம் | வெண்மை, வெண்ணீர். |
| சுசிகரம் | தூய்மை, நேர்மை, மேன்மை, இனிமை. |
| சுசுகம் | முலைக்கண். |
| சுசூலம் | சிறுபொருள். |

| | |
|---|---|
| சுச்ரூஷை, சிச்ருஷை | பணிவிடை. |
| சுஷுப்தி, சுழுத்தி | உறக்கம். |
| சுதந்தரம், சுதந்திரம், சுதந்திரியம் | உரிமை. |
| சுதந்தரர் | முதல்வர். |
| சுதரிசனம் | மாலாழி, உருளை, அழகு. |
| சுதன் | மகன், புதல்வன். |
| சுதினம், சுபதினம் | நன்னாள். |
| சுதேசம் | தாய்நாடு. |
| சுத்த கன்மம் | தூயவினை. |
| சுத்த சுயம்பிரகாசம் | தூயபேரொளி. |
| சுத்த நிலை | தூய்மைநிலை, தூநிலை. |
| சுத்தமாயை | தூய மாயை. |
| சுத்தம் | தூய்மை, துப்புரவு. |
| சுத்தாத்துமா | தூய உயிர். |
| சுந்தரம் | அழகு. |
| சுந்தரீ | அழகி. |
| சுபக்கிரியை | நற்செயல். |
| சுப சகுனம் | நற்குறி. |
| சுபவசனம் | நன்மொழி. |
| சுபாசுபம் | நன்மை தீமை, நலந்தீங்கு. |
| சுபாபம், சுபாவம் | தன்மை, இயற்கை, இயல்பு. |
| சுப்பிரமணியன் | முருகன். |
| சுமங்கலம் | நன்மை. |
| சுமதி | நல்லறிவினள். |
| சுமரணம், ஸ்மரணம், ஸ்மரணை | உணர்ச்சி. |

| | |
|---|---|
| சுயசனம் | தன்னினம், இனத்தவர். |
| சுயபாஷை | தாய்மொழி. |
| சுயம்பாகம் | தானே சமைத்தல், அட்டிற்றொழில். |
| சுயம்பு | தானுண்டானவன், கடவுள். |
| சுயம்வரம், சுவயம்வரம் | தான் விரும்பும் மணம். |
| சுயாதீநம் | தனக்குரிமை. |
| சுரங்கம் | ஒளிப்பிடம், கீழறை, மறைவிடம். |
| சுரஸம் | முறித்த சாறு. |
| சுரதம் | சேர்க்கை, அன்பு. |
| சுரத லீலை | இன்பவிளையாட்டு. |
| சுரபேதம் | இசை மாற்றம். |
| சுரம், ஜ்வரம் | காய்ச்சல், வெப்பு நோய். |
| சுரம், ஸ்வரம் | இசை. |
| சுராபானம் | கட்குடி. |
| சுருதம் | வரலாறு, கேள்வி. |
| சுருதி | மறை, இசை, ஒலி. |
| சுரூபி, சொரூபி | அழகன். |
| சுரோணிதம் | செந்நீர். |
| சுரோத்ரம் | காது, செவி. |
| சுலபம் | எளிது. |
| சுலோகம் | செய்யுள், பழமொழி. |
| சுலோசனம் | கண், மான், மூக்குக்கண்ணாடி. |
| சுல்கம் | விலைப்பொருள். |
| சுவகமம் | தானே செல்வது. |

| | |
|---|---|
| சுவஸ்தம், சொஸ்தம் | நலம், குணம். |
| சுவதந்திரம் | உரிமை. |
| சுவபட்சம் | தன் பக்கம். |
| சுவயாபிமானம் | தந்நலம். |
| சுவரூபம், சொரூபம் | உண்மை வடிவம், இயற்கை வடிவம். |
| சுவரூபலக்கணம், சொரூபலக்கணம் | சிறப்பியல், உண்மை இயல். |
| சுவர்க்க மார்க்கம் | மேல் வழி. |
| சுவர்க்கம் | துறக்கம், பேரின்பவீடு. |
| சுவர்க்கலோகம் | துறக்கவுலகம், விண்ணுலகம். |
| சுவர்ணதானம் | பொற்கொடை. |
| சுவர்ண புஷ்பம் | பொன்மலர். |
| சுவர்ணம் | பொன். |
| சுவல்பனம், சொப்பனம் | கனவு. |
| சுவாசகாசம் | இளைப்பிருமல். |
| சுவாச பலம் | மூச்சு வன்மை. |
| சுவாசம் | மூச்சு, உயிர்ப்பு. |
| சுவாசாசயம் | மூச்சுப்பை. |
| சுவாசித்தல் | உயிர்த்தல். |
| சுவாமி, சாமி | தலைவன், அடிகள். |
| சுவார்ச்சிதம், சுயார்ச்சிதம் | தான் தேடிய பொருள். |
| சுவாலை, ஜ்வாலை | சுடர், தீப்பிழம்பு. |
| சுவீகார புத்திரன் | எடுப்புப் பிள்ளை. |
| சுவீகாரம் | தனதாக்குதல். |
| சுவேச்சை, சுயேச்சை | தன் விருப்பம். |
| சுவேதசம் | வியர்வைப் பிறப்பு. |
| சுவேதம் | வெண்மை. |

## சூ

| | |
|---|---|
| சூகம் | அம்பு, இரக்கம், ஊர்வன, காற்று. |
| சூக்கும அணுரூபம் | நுண் அணு. |
| சூக்கும ஆகாசம் | நுண்ணிய வெளி. |
| சூக்கும காயம், சூக்கும சரீரம், சூக்குமதேகம் | நுண்ணுடல். |
| சூக்கும சத்தி | நுண்ணிய ஆற்றல். |
| சூக்குமம், சூட்சுமம் | நுண்மை அணு, நுண்துகள். |
| சூக்குமலிங்கம் | நுண்குறி. |
| சூக்கும வாக்கு | நுண்ணோசை. |
| சூசனம் | சுருக்கம். |
| சூசி | ஊசி, குறிப்பு, துளை. |
| சூசிகன் | தையற்காரன். |
| சூசுகம் | முலைக்கண். |
| சூடம் | உச்சிச்சடை, தலை. |
| சூதகம் | தீட்டு. |
| சூத்திரதாரி, சூஸ்திரதாரி | பாவையாட்டுவோன், கடவுள். |
| சூத்திரம் | பொறி, கயிறு. |
| சூரணம், சூர்ணம் | தூள். |
| சூரன் | வீரன். |
| சூரியகலை | வெங்கதிர், ஆண்கலை. |
| சூரிய கிரகணம் | பகலவன் ஒளிமறைப்பு. |
| சூரிய கிரணம் | பகலோன் கதிர். |
| சூரிய நமஸ்காரம் | பகலவன் வணக்கம். |

| | |
|---|---|
| சூரியப் பிரகாசம் | ஞாயிற்றிளொளி, கதிரொளி. |
| சூரிய மண்டலம் | கதிர்வட்டம். |
| சூரிய மானம், சௌரமானம் | பகல் வழியளவு. |
| சூரியமூர்த்தி | ஞாயிற்றுருவினன். |
| சூரியன் | ஞாயிறு, பகலவன், கதிரவன், சுடரவன், பரிதி, என்றூழ், கனலி, எல்லோன், வெயிலோன், வெய்யோன். |
| சூரியாஸ்தமனம் | கதிரவன் மறைவு, பொழுதுபடல். |
| சூலம் | வேல். |
| சூறை மாருதம் | சுழல்காற்று. |
| சூனியவாதம் | இல்பொருள் வழக்கு. |
| சூன்யம் | பாழ், இன்மை, இல்பொருள். |

## சே

| | |
|---|---|
| சேகரம் | தொகுப்பு, கூட்டம். |
| சேடம், சேஷம் | எச்சில், மிச்சம். |
| சேடன், சேஷன் | அடிமை. |
| சேடிகை | பணிப்பெண். |
| சேட்டநம் | முயற்சி. |
| சேட்டன், சேஷ்டன் | தமயன், மூத்தோன். |
| சேட்டித்தல் | தொழிற்படுத்தல். |
| சேட்டை, சேஷ்டை | குறும்பு, தமக்கை, அக்காள். |
| சேதம் | அழிவு, கேடு. |

சேதன அருவ ஆன்ம தத்துவம் — அறிவுள்ள உயிர்ப்பொருள்.
சேதனம் — அறிவு, அறிவுப்பொருள்.
சேதித்தல் — வெட்டல், உடைத்தல்.
சேது — அணை, செய்கரை, சிவப்பு.
சேத்திரம், க்ஷேத்திரம் — திருக்கோயில், திருப்பதி.
சேமநிதி — புதையல், எய்ப்பினில்வைப்பு.
சேமம், க்ஷேமம் — நலம், காவல், புதையல்.
சேவகன் — காவற்காரன், போர்மறவன்.
சேவித்தல் — தொழுதல், வணங்கல்.
சேவை — வழிபாடு, ஊழியம், தொண்டு.
சேனாதிபதி, சேனாதிபன், சேனாபதி — படைத்தலைவன், சேனைத்தலைவன்.

## சை

சைகதம் — ஆற்றங்கரை.
சைசவம் — இளமை.
சைதந்நியம் — அறிவு, உயிர், கடவுள்.
சைதந்ய ரூபம் — அறிவுவடிவம், அறிவுரு.
சைநிகன் — படையுடையான், படைத்தலைவன்.
சைந்யம் — படை.
சையோகம், சம்யோகம் — கூட்டம், (தரு) சேர்க்கை, ஒற்றுமை.
சைரிபம் — எருமை.
சைலம் — மலை.

## சோ

| | |
|---|---|
| சோகம் | சோர்வு, தளர்வு, துன்பம். |
| சோடசம், ஷோடசம் | பதினாறு. |
| சோணாசலம் | திருவண்ணாமலை. |
| சோணிதம் | செந்நீர், சிவப்பு. |
| சோதரன், சகோதரன் | உடன்பிறந்தான். |
| சோதனம், சோதனை | ஆராய்ச்சி, ஆய்வு, தேர்வு. |
| சோதி, ஜோதி | ஒளி, ஒளிவிளக்கம். |
| சோதிடசாஸ்திரம், சோசியம் | கோணூல். |
| சோதிடர், சோசியர் | கோள்நூலார், காலக்கணிதர், குறிப்பாளர். |
| சோதிரூபம், ஜோதிரூபம் | ஒளிவடிவம். |
| சோபம் | அழகு, சோர்வு. |
| சோபனம் | அழகு, வாழ்த்து, நலம். |
| சோபா, சோபை | ஒளி. |
| சோபானக்கிரமம் | படிமுறை. |
| சோபானம் | படி. |
| சோபித்தல் | ஒளிர்தல், விளங்கல். |
| சோமவாரம் | திங்கட்கிழமை. |
| சோமன் | திங்கள், மதி. |
| சோரபுருஷன் | கள்ளக்கணவன். |
| சோரமார்க்கம் | தீயவழி, கெட்டவழி. |
| சோரம் | களவு, வஞ்சனை. |
| சோலி, ஜோலி (தெலு.) | வேலை, தொழில். |

## சௌ

| | |
|---|---|
| சௌகரியம், சௌரியம் | நலம், எளிது. |
| சௌக்கியம் | நலம், மகிழ்ச்சி. |
| சௌசம் | துப்புரவு. |
| சௌசன்னியம் | அன்பு, நட்பு. |
| சௌதாயகம் | நன்கொடைப்பொருள். |
| சௌந்தரம், சௌந்தரியம் | அழகு. |
| சௌந்தரியவதி | அழகி. |
| சௌபாக்கியவதி | செல்வி, திருமகள். |
| சௌரம், சௌளகம் | மயிர்களைதல். |
| சௌலப்பியம் | எளிமை. |
| சௌளகருமம் | குடுமி வைக்குஞ் சடங்கு. |

## ஞா

| | |
|---|---|
| ஞாதம் | அறியப்பட்டது. |
| ஞாதா | அறிவாளன். |
| ஞாதி | சுற்றம், தாயத்தார். |
| ஞாதுரு | அறியும் முதல், உயிர், காண்பான், அறிபவன். |
| ஞாபகச்சிந்நம் | நினைவுக்குறி. |
| ஞாபகம் | நினைவு. |
| ஞாபிதம் | அறிவிக்கப்பட்டது. |
| ஞாயம் | நெறி, முறை. |
| ஞானகாண்டம் | அறிவுப்பகுதி, அறிதகுதொகுதி. |
| ஞானசக்தி | அறிவாற்றல். |

| | |
|---|---|
| ஞானசபை | சிற்றம்பலம், அறிவுக்கழகம். |
| ஞானசாஸ்திர பண்டிதர் | அறிவுநூற் புலவர். |
| ஞானசாஸ்திரம் | அறிவு நூல். |
| ஞான சொரூபம் | அறிவுரு. |
| ஞானசொரூபர் | பேரறிவினர். |
| ஞானதிட்டி, ஞானதிருஷ்டி | அகப்பார்வை, அகக்கண். |
| ஞானதீபம் | அறிவொளி. |
| ஞானபூர்வகம் | முன்னறிவு. |
| ஞானமயன் | அறிவு வடிவினன். |
| ஞானமார்க்கம் | அறிவுநெறி. |
| ஞானமூர்த்தி | அறிவு வடிவினன். |
| ஞானம் | அறிவு, கல்வி, மெய்யுணர்வு, அருளறிவு. |
| ஞானாகாயம் | அறிவுவெளி. |
| ஞானாசிரியன் | அருட்குரவன், அருளாசிரியன். |
| ஞானார்த்தம் | உட்பொருள், மெய்ப்பொருள். |
| ஞானானந்தம் | பேரின்பம். |
| ஞானிகள் | மெய்யறிவினர், துறவிகள். |
| ஞானேந்திரியம் | அறிவுப்பொறி, அறிவுக்கருவி. |
| ஞானோபதேசம் | மெய்ப்பொருளுணர்த்தல், மெய்யறிவுறுத்தல். |
| ஞேயம் | அறியப்படுவது. |

## த

| | |
|---|---|
| தகநம் | எரித்தல், சுடுதல். |
| தகநன் | நெருப்பு. |
| தகரவித்தை | திருக்கூத்தின் றன்மை. |
| தகரோபாசனை | நெஞ்சக வழிபாடு. |
| தகவல் (இந்து.) | செய்தி. |
| தகித்தல் | கொளுத்தல், எரித்தல். |
| தக்கிரம் | மோர். |
| தக்ஷிணாயநம் | தெற்குவழி. |
| தசகம், தசம் | பத்து. |
| தசநம் | பல். |
| தசமம் | பத்தில் ஒன்று. |
| தசமி | பத்தாவது, பத்தாம் நாள். |
| தசாங்கம் | பத்துருப்பு. |
| தசாவதாரம் | பத்துப்பிறப்பு. |
| தசிநம் | பல், எயிறு. |
| தசுமன் | கள்வன். |
| தசேந்திரியம் | பத்துப்பொறி. |
| தசை, தசா | ஊன், புலால். |
| தடத்தலக்கணம் | பொதுவியல். |
| தடாகம் | பொய்கை, குளம். |
| தட்சசை | காளி. |
| தட்சணம், தக்ஷணம், தக்கணம் | தெற்கு, வலப்பக்கம், உடன். |
| தட்சணஸ்தம், தட்சணஹஸ்தம் | வலக்கை. |
| தட்சணாமூர்த்தம் | குருவடிவம், தென்முகக் கடவுள். |

| | |
|---|---|
| தட்சணை, தக்கணை | காணிக்கை. |
| தட்சாயன் | கருடன். |
| தட்சாரி | வீரபத்திரன். |
| தட்சிணாவர்த்தம் | வலம்புரிச் சங்கு. |
| தட்சை | நிலம். |
| தண்டதரன் | அரசன், இயமன். |
| தண்டநீதி | கட்டளைச்சட்டம், செங்கோன்முறை. |
| தண்டபாசிகன் | கொலைகாரன். |
| தண்டம் | வணக்கம், ஒறுப்பு, கோல். |
| தண்டனம், தண்டனை | ஒறுப்பு, ஆணை, கட்டளை. |
| தண்டாயுதம் | தடி, ஒறுத்தற்கருவி. |
| தண்டுலம் | அரிசி. |
| ததகம் | காற்று. |
| ததம் | அகலம். |
| ததாமுகம் | தொடக்கம். |
| ததாஸ்து | அவ்வண்ணமாகுக, அப்படியே யாகட்டும். |
| ததி | தயிர். |
| ததியோதநம், தத்தியோதநம் | தயிர்ச் சோறு. |
| தத்தம் | கொடுத்தல், ஈகை. |
| தத்தி | கொடை. |
| தத்திகாரம் | பொய். |
| தத்திதம் | பகுபதம் |
| தத்தியம் | மெய். |
| தத்திரம் | பதில். |
| தத்துவ சாஸ்திரம் | மெய்ப்பொருணூல், அறிவுநூல். |

| | |
|---|---|
| தத்துவ சாஸ்திர விற்பன்னர் | அறிவுநூற் புலவர். |
| தத்துவ சாஸ்திரியார் | கலைநூலறிஞர். |
| தத்துவ சாதநம் | உண்மைநெறி, மெய்ந்நெறிப் பயிற்சி. |
| தத்துவ சொரூபம் | உண்மைவடிவம், மெய்வடிவம். |
| தத்துவ ஞானம் | உண்மையறிவு, மெய்யறிவு. |
| தத்துவ ஞானி | மெய்யறிவன், மெய்யுணர்வினன். |
| தத்துவ நுட்பம் | மெய்ப்பொருள் நுட்பம். |
| தத்துவம் | உண்மை, மெய், பொருளியல் உண்மை. |
| தத்துவாதீதன் | சிவன். |
| தத்துவாத்வா | பொருள் வழி. |
| தநகரன் | கள்வன். |
| தநதன் | ஈகையாளன். |
| தநபதி | செல்வக்கடவுள், செல்வன். |
| தநம், தனம் | செல்வம், பொருள், கொங்கை. |
| தநயன் | மகன். |
| தநயை | மகள். |
| தநவான் | செல்வன். |
| தநாதிபன் | செல்வக்கடவுள். |
| தநிகை | இளம்பெண். |
| தநிட்டை | அவிட்டநாள். |
| தநிதம் | முழக்கம். |
| தநு, தனு | யாக்கை, உடல். |
| தநுசன் | மகன். |
| தநு: | வில். |

| | |
|---|---|
| தநுசை | மகள். |
| தநுரசம் | வியர்வை. |
| தந்தம் | பல். |
| தந்தி | ஆண்யானை, கம்பி, மின் செய்தி. |
| தந்திரம் | நூல், சூழ்ச்சி. |
| தந்திரி | சூழ்ச்சியாளன். |
| தந்நியத்துவம் | செல்வம் உடைமை. |
| தபசி, தவசி | தவஞ்செய்வோன். |
| தபசு, தவசு, தபஸ் | தவம். |
| தபநன் | ஞாயிறு, பகலவன், கதிரவன். |
| தபநீயம், தபநீயகம் | பொன். |
| தபால் (இந்து.) | அஞ்சல். |
| தபோதனர் | தவச்செல்வர், முனிவர். |
| தபோநிதி | தவச்செல்வர். |
| தமகன் | கொல்லன். |
| தமசு, தமஸ் | இருள், அறியாமை. |
| தமநன் | கீழ்ப்படுத்துபவன். |
| தமநியம் | பொன். |
| தமம் | இருள், மேற்பட்டது, பொறியடக்கல். |
| தமரகம், தமருகம் | உடுக்கை. |
| தமாசு, தமாஷ் (இந்து.) | பகடி, விளையாட்டு. |
| தமோகரன் | திங்கள். |
| தமோக்கிநன் | தீ. |

| | |
|---|---|
| தமோபகன் | கதிரவன், திங்கள். |
| தமோமணி | மின்மினி. |
| தமோமயம் | இருள். |
| தம்பதி | கணவனும் மனைவியும். |
| தம்பநம், ஸ்தம்பநம் | நிறுத்தல், அடக்கல். |
| தம்பம், ஸ்தம்பம் | தூண். |
| தயவு, தயா, தயை | அன்பு, இரக்கம், ஈரம், கண்ணோட்டம். |
| தயாதருமம் | அருளறம். |
| தயாநிதி | அருட்செல்வம். |
| தயாளம் | இரக்கம். |
| தயிரியம், தைரியம் | உளத்திட்பம், உறுதி, ஊக்கம். |
| தயிலம், தைலம் | எண்ணெய். |
| தரணி, தரா | நிலம், வையகம். |
| தரணிதரன் | அரசன். |
| தரம் | தகுதி, நிலை. |
| தரன் | தாங்கியவன். |
| தராசு, திராசு | துலாக்கோல், நிறைகோல். |
| தராபதி | அரசன். |
| தரிசனம் | காட்சி, பார்வை, கண். |
| தரிசனை | காட்சி, கட்புலனாதல். |
| தரிசித்தல் | காண்டல், தொழுதல். |
| தரிசியம் | பார்க்கத்தக்கது. |
| தரித்தல் | அணிதல், பூணல், உடுத்தல், மேற்கொள்ளல். |

| | |
|---|---|
| தரித்திரம், தரித்திரியம் | வறுமை, எளிமை, நல்குரவு, மிடி, இன்மை. |
| தருக்கசாஸ்திரம் | அளவைநூல். |
| தருக்கம் | அளவை, அளவைநூல். |
| தருக்கவுரை | வழக்குரை. |
| தருக்கன் | வழக்கிடுவோன். |
| தருக்கித்தல் | வழக்கிடுதல். |
| தருசணி | வில்மகள். |
| தருசம் | பெருமை. |
| தருச்சநம் | குற்றப்படுதல். |
| தருச்சாரம் | கற்பூரம், சூடம். |
| தருணம் | வேளை, பொழுது. |
| தருணாஸ்தி | கொழுப்பு. |
| தருணி | இளம்பெண். |
| தருநகம் | முள். |
| தருப்பகன் | காமன். |
| தருப்பணம் | கண்ணடி. |
| தருமசபை | அறமன்றம். |
| தருமசாத்திரம் | அறநூல். |
| தருமசொரூபர் | அறவடிவினர். |
| தருமபாகினி | மனைவி. |
| தருமம், தர்மம் | அறம். |
| தருமிருகம் | குரங்கு. |
| தருமோபதேசம் | அறமுரைத்தல். |
| தருராசன் | பனைமரம். |
| தர்மசக்கரம் | அறவாழி. |
| தர்மமார்க்கம் | அறநெறி, அறமுறை. |
| தர்மவசநம் | அறவுரை. |
| தர்மார்த்த காம மோக்ஷம் | அறம் பொருள் இன்பம் வீடு. |

| | |
|---|---|
| தலதரிசனம் | திருக்கோயில் வழிபாடு. |
| தலம், ஸ்தலம் | இடம், கோயில். |
| தலயாத்திரை | திருக்கோயிற் பயணம், திருக்கோயிற் செலவு. |
| தலவிருட்சம் | கோயில்மரம். |
| தலாடகன் | யானைப் பாகன். |
| தலிகம் | மரம். |
| தவளம் | அழகு. |
| தவனன் | கதிரவன். |
| தவிசு | இருக்கை. |
| தவித்தல், தபித்தல் | வருந்துதல். |
| தளகர்த்தர், தளபதி | படைத்தலைவன். |
| தற்சமயம், தத்சமயம் | இப்பொழுது, இவ்வேளை. |
| தற்சனி | சுட்டுவிரல். |
| தற்பரம் | கடவுள். |
| தனு கரண புவன போகம் | உடம்பு உறுப்பு இடம் நுகர் பொருள். |

## தா

| | |
|---|---|
| தாக சாந்தி | விடாய்தணித்தல். |
| தாகம் | விடாய், நீர்வேட்கை. |
| தாசத்துவம் | அடிமைத்தன்மை. |
| தாச மார்க்கம், தாதமார்க்கம் | அடிமை நெறி. |
| தாசன் | அடியான், அடிமை. |
| தாசி | அடியாள், கணிகைமாது, பணிப்பெண். |

| | |
|---|---|
| **தாடநம்** | தட்டுதல். |
| தாக்ஷணம், தாட்சணியம் தாட்சிண்யம் | கண்ணோட்டம். |
| தாட்டாந்தம் | எடுத்துக்காட்டை யுடையது. |
| தாட்டிகம், தாஷ்டிகம் | வளப்பம், செழிப்பு. |
| தாணு | சிவன், மலை, குற்றி, நிலைபேறு, புகலிடம். |
| தாதர் | அடிமைக்காரர். |
| தாதா | கொடையாளி, வள்ளல். |
| தாதாந்மியம் | அதுவதுவாய் ஒன்றிப்பு, நீங்காமை. |
| தாதி | அடியாள், தோழி, செவிலித்தாய். |
| தாது | முதனிலை, நரம்பு, முதற்பொருள். |
| தாத்பரியம், தாற்பரியம் | கருத்து, கருத்துரை. |
| தாநம், ஸ்தானம் | இடம், இருக்கை. |
| தாநம், தானம் | அறம், ஈகை, கொடை. |
| தாநாதிபதி | படைத்தலைவன். |
| தாபகம், ஸ்தாபகம் | நிலைநிறுத்தல். |
| தாபதன் | தவஞ்செய்வோன், துறவி. |
| தாபநன் | கதிரவன். |
| **தாபம்** | வெம்மை. |
| தாபரம், தாவரம் | நிலையியற்பொருள், நிற்பன, அசையாப்பொருள். |

| | |
|---|---|
| தாபித்தல் | நிறுவுதல், நாட்டல், நிலை நிறுத்தல். |
| தாமசம், தாமதம் | தாழ்த்தல், அட்டி, மயல். |
| தாமம் | கயிறு, மாலை. |
| தாமிரம், தாமிரை | செம்பு. |
| தாமோதரன் | திருமால், ஆமை. |
| தாரகம் | துணை. |
| தாரகன் | துணைவன். |
| தாரகாதிபதி | திங்கள். |
| தாரகை, தாரகா | விண்மீன். |
| தாரணம் | பூணுதல், அணிதல். |
| தாரணை | பொறைநிலை, நினைவொருமை. |
| தாரதம்மியம் | ஏற்றத்தாழ்வு. |
| தாரம் | மனைவி. |
| தாராபதம் | விண்ணகம், வானம், விசும்பு. |
| தாராபதி | வியாழன், திங்கள். |
| தாரை | ஒழுக்கு. |
| தார்க்கிகர் | வழக்கிடுவோர். |
| தாலம் | உண்கலம், தட்டம். |
| தாளத்திரயம் | மூன்றுதாளம், மும்முறை தட்டுதல். |
| தானம் | ஈகை, கொடை. |
| தானியம் | தவசம், கூலம். |

## தி

திகிரி, திகிரிகை — உருளை, மலை.
திக்கு — மாதிரம், பால், பக்கம்.
திடபுருஷன், திடபுருடன் — ஆண்டகை, வல்லவன்.
திடம், திருடம் — வன்மை, உறுதி.
திட்டம், திருஷ்டம் — காணப்படுவது.
திட்டாந்தம் — எடுத்துக்காட்டு.
திட்டித்தம்பம் — கண்கட்டு.
திநகரன் — பகலவன், கதிரவன், வெய்யோன்.
திநம் — நாள், ஞான்று, வைகல்.
திமிரம் — இருட்டு.
திமிராரி — பகலவன், ஞாயிறு.
தியாகம் — கொடை.
தியாநம் — நினைவு, அகவழிபாடு.
தியானித்தல் — நினைத்தல், வழிபடல்.
திரஸ்காரம் — இகழ்ச்சி.
திரணம், திருணம் — சிறுமை, நொய்மை, புல், துரும்பு.
திரம், ஸ்திரம் — நிலை, உறுதி.
திரயம் — மூன்று.
திரவத்துவம் — நெகிழ்ச்சி (தரு)
திரவம் — சாறு.
திரவியம் — பொருள், செல்வம்.
திரவியவான் — செல்வன்.
திராட்சம் — கொடிமுந்திரி.

| | |
|---|---|
| திராவகம் | செய்நீர், சாரம். |
| திரி | மூன்று. |
| திரி, ஸ்திரீ | பெண். |
| திரிகம் | மூன்று கூடியது. |
| திரிகரணம் | மனமொழிமெய். |
| திரிகுணம் | மூவியல், முப்பண்பு. |
| திரிசூத்திரம் | முப்புரிநூல், பூணூல். |
| திரிசூலம் | முத்தலைவேல். |
| திரிதண்டம் | முக்கோல். |
| திரிதோஷம் | முக்குற்றம். |
| திரிநேத்திர சூடாமணி | திங்கள். |
| திரிபுண்டரம் | முக்குறி. |
| திரிபுரம் | முப்புரம். |
| திரிமூர்த்தி | மூவடிவினன். |
| திரியக்கி | தேங்காய். |
| திரியக்கு | குறுக்கு. |
| திருட்டம், திருஷ்டம் | தெளிவு, பார்க்கப்பட்டது. |
| திருட்டாந்தம், திருஷ்டாந்தம் | சான்று, எடுத்துக்காட்டு, மேற்கோள் (தரு). |
| திருட்டி திருஷ்டி, திட்டி, திஷ்டி | அறிவு, கண், பார்வை, கண்ணேறு. |
| திருஷ்டிதோஷம் | கண்ணேறு, கண்ணெச்சில், விழியூறு. |
| திருத்தி, திருப்தி | மனநிறைவு, அமைவு. |

| | |
|---|---|
| திரேகம் | யாக்கை, உடல். |
| திரோதாக்கினி | முத்தீ. |
| திரோதானம் | மறைப்பு. |
| திரோபவம் | மறைத்தல். |
| திலகம் | பொட்டு, மேன்மை. |
| திலகலம் | செக்கு. |
| திலதம் | சுட்டி, பொட்டு. |
| திவா | பகல், எல். |
| திவாகரன் | ஞாயிறு, பகலவன். |
| திவ்வியகவி | அருட்புலவன் |
| திவ்வியக்ஷேத்திரம் | மேலான இடம், திருப்பதி. |
| திவ்வியம் | நேர்த்தி, இனிமை, மேன்மை. |
| தினசரி | நாடோறும். |
| தினந்தோறும் | நாடோறும். |

## தீ

| | |
|---|---|
| தீக்கணம், தீட்சணம் | கூர்மை, வெம்மை, கொடுமை. |
| தீட்சணியம் | கூர்மை. |
| தீபகணம் | தீவின் கூட்டம். |
| தீபகம் | விளக்கு. |
| தீபகம்பம், தீபஸ்தம்பம் | விளக்குத்தண்டு, கலங்கரை விளக்கம். |
| தீபநம் | பசி. |
| தீபம் | விளக்கு, ஒளி, சுடர். |
| தீபாராதனை | ஒளிவழிபாடு. |
| தீரம் | கரை, மனவலி. |
| தீரன் | திண்ணியன், ஆண்மை, திறனாளன். |
| தீர்க்க தரிசனம் | முக்காலக்காட்சி, தெளிவுக் காட்சி. |

| | |
|---|---|
| தீர்க்க தரிசி | முக்காலவுணர்வினன், மெய்க் காட்சியாளன். |
| தீர்க்கபாதபம் | தென்னைமரம். |
| தீர்க்கம் | தெளிவு, நீளம், கூர்மை. |
| தீர்க்க வசனம் | உறுதிச்சொல். |
| தீர்க்காயு, தீர்க்காயுசு | நீடுவாழ்வு. |
| தீர்த்தகரணம் | தூயநீராக்கல். |
| தீர்த்தக்கட்டம் | புனிதநீர்த்துறை. |
| தீர்த்தம் | புனிதநீர், திருக்குளம். |
| தீவாந்தரம் | தீவு, வெளி. |
| தீவிகை | விளக்கு. |
| தீவிரகதி | விரைவான நடை. |
| தீவிரபக்குவம் | முறுகிய நிலை. |
| தீவிரம் | விரைவு. |

## து

| | |
|---|---|
| துக்ககன் | துன்பமுள்ளோன். |
| துக்கசாகரம் | துயரக்கடல், துன்பக்கடல். |
| துக்கநிவாரணம் | துன்பநீக்கம். |
| துக்கம் | துன்பம், பரிவு, கவலை, வருத்தம், துயரம். |
| துங்கம் | உயர்ச்சி. |
| துட்குணம், துஷ்குணம், துர்க்குணம் | தீக்குணம், கெட்டவியல்பு. |
| துட்டகருமம், துஷ்டகருமம் | தீத்தொழில். |
| துட்டசுபாவம், துஷ்டசுபாவம் | கெட்ட இயல்பு. |

| | |
|---|---|
| துட்டம் | அடங்காமை. |
| துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் | தீயோரை ஒறுத்து நல்லோரைக்காத்தல். |
| துஷ்டபிராணிகள் | கொடிய சிற்றுயிர்கள். |
| துஷ்டபுத்தி | தீய அறிவு, கெடுமதி. |
| துஷ்டன் | தீயவன், பட்டி, வம்பன். |
| துஷ்டை | தீவி, தீயவள். |
| துதி, ஸ்துதி | வணக்கம், வழுத்துரை. |
| துதித்தல் | வாழ்த்தல், பரவல், வணங்கல், போற்றல். |
| துன்மார்க்கர் | தீயொழுக்கினர். |
| துப்பட்டா, துப்பட்டி (இந்து.) | மேற்போர்வை, மேலாடை. |
| துரககதி | குதிரை நடை. |
| துரகதம், துரங்கம் | குதிரை. |
| துரதிஷ்டம் | போகூழ், தீவினைப்பயன். |
| துரந்தரன் | வல்லாளன். |
| துரபிமானம் | தீய பற்று. |
| துரவத்தை, துரவஸ்தை | கெட்ட நிலை. |
| துராகதம் | கெட்ட நடை. |
| துராகிருதம் | தீச்செயல். |
| துராசை | தீய அவா. |
| துராத்மா | தீயவுயிர். |
| துராலோசனை | தீய நினைவு, கெட்டநினைவு. |
| துரிதம் | விரைவு. |
| துரியம் | பேருறக்கம். |
| துரியாதீதம் | உயிர்ப்படக்கம். |
| துருவம் | அசையா நிலை. |

துரோகம் — இரண்டகம், வஞ்சனை.
துரோகி — இரண்டகஞ் செய்வோன், வஞ்சகன்.
துர்க்கதம் — துன்பம்.
துர்க்கதி — தீய நடை.
துர்க்கந்தம் — தீநாற்றம்.
துர்க்கருமம் — தீத்தொழில்.
துர்ச்சகுநம் — கெட்டகுறி, தீக்குறி.
துர்ச்சனர் — கெட்டவர்.
துர்நிமித்தம் — தீக்குறி.
துர்ப்பலம் — வலுக்குறைவு, வலுவின்மை.
துர்ப்பிட்சம் — பஞ்சம், சிறுவிலை.
துர்மதி — கெட்ட எண்ணம், கெடுமதி.
துர்மரணம் — ஒழுங்கில் சாவு, தகாச்சாவு.
துர்மார்க்கம், துன்மார்க்கம் — தீயவழி, கெட்ட நடை.
துர்லபம் — அரிது, முடியாதது.
துர்வாசனை — தீய நாற்றம்.
துல்யம், துல்லியம் — ஒப்பு, ஈடு.
துவசம், துவஜம் — கொடி.
துவஜஸ்தம்பம் — கொடிமரம்.
துவஜாரோகணம் — கொடியேற்றம்.
துவயம் — இரண்டுதன்மை.
துவனி, தொனி — ஒலி, ஓசை.
துவாதசம் — பன்னிரண்டு.
துவாதசாந்தம் — பன்னிரண்டாம் நிலை.
துவாந்தம் — இருள்.
துவாரபாலகர் — வாயிற் காப்போர்.
துவாரம் — வாயில், வழி, புழை, துளை.

துவிசம் — இருபிறப்புடையது, முட்டையிற் பிறப்பது.
துவிசன் — இருபிறப்பாளன்.
துவிதம், துவி — இரண்டு.
துவிதா — இரண்டுவகை.
துவிதாகதி — நண்டு.
துவிதீயபாதம் — இரண்டாம் அடி.
துவிதீயம் — இரண்டாவது.
துவிபாஷிதர் — இருமொழி பேசுவோர்.
துவீதியன் — மகன்.
துவேஷம் — பகை, வெறுப்பு.
துவைதம் — இரண்டு.
துவைதீபாவம் — இரண்டின்றன்மை.

## தூ

தூசனம், தூடணம், தூஷணம், தூஷணை — இகழ்ச்சி, பழி, பழிச்சொல்.
தூஷித்தல் — பழித்தல்.
தூதர் — ஒற்றர், வேவுகாரர்.
தூபம் — புகை.
தூபி, ஸ்தூபி, தூபிகை — முடி, (கோயில் முதலியவற்றின் முடி.)
தூமம் — புகை.
தூரதிட்டி, தூரதிருஷ்டி — தொலைப்பார்வை, தொலைநோக்கு.
தூரதிருஷ்டிக் கண்ணாடி — தொலைநோக்காடி.
தூரம் — சேய்மை, தொலைவு, எட்டாக்கை.

| | |
|---|---|
| தூர்த்தர் | காமுகர், தீயர், வஞ்சகர். |
| தூலசரீரம், ஸ்தூலசரீரம் தூலதேகம் | பருவுடல், உருவுடம்பு. |
| தூலசித்து | உயிர். |
| தூலசூக்குமம் | உருஅருவம். |
| தூலதேகம் | பருவுடல். |
| தூலம் | பருமை. |
| தூலலிங்கம் | பரூஉக்குறி. |
| தூலவுலகம் | பருப்பொருளுலகம். |

தெ

| | |
|---|---|
| தெக்கிணம் | தெற்கு. |
| தெய்வீகம் | கடவுட்டன்மை. |
| தெரிசநம் | காட்சி. |

தே

| | |
|---|---|
| தேககாந்தி | உடம்பினொளி. |
| தேகசம்பந்தம் | உடற்றொடர்பு. |
| தேகநாசம் | உடலழிவு. |
| தேகம், திரேகம் | உடல், யாக்கை, மெய். |
| தேகவியோகம் | சாக்காடு. |
| தேகாப்பியாசம் | உடற்பயிற்சி. |
| தேசசரிதம் | நாட்டு வரலாறு. |
| தேசசு, தேஜஸ் | ஒளி. |
| தேசம் | நாடு. |
| தேசன் | ஒளியுடையவன். |
| தேசாசாரம் | உலகநடை, உலகியல். |

| | |
|---|---|
| தேசாந்தரம் | அயல்நாடு. |
| தேசாந்தரி | பிற நாட்டான். |
| தேசிகன், தேசன் | ஆசிரியன், குரவன். |
| தேசோமயம் | ஒளிவடிவு. |
| தேயு | தீ, அனல் (சித்-தத்) |
| தேவகாயநன் | கந்தருவன். |
| தேவஸ்தானம் | கடவுள் நிலையம், கோயில். |
| தேவதூஷணம் | தெய்வமிகழ்தல். |
| தேவதை, தேவதா | கடவுள், தெய்வம். |
| தேவபக்தி, தெய்வபக்தி | கடவுட்பற்று, கடவுளிடத் தன்பு, தெய்வநேயம். |
| தேவபாஷை, தெய்வபாஷை | கடவுண்மொழி. |
| தேவபூமி | விண்ணுலகு. |
| தேவ வாக்கியம் | கடவுண்மொழி. |
| தேவன் | இறைவன், தலைவன். |
| தேவாதீனம், தெய்வாதீனம் | கடவுட்குரியது, திருவருட் செயல். |
| தேவாலயம் | திருக்கோயில். |
| தேவான்னம் | கடவுளுணா. |
| தேவி | இறைவி, அரசி, தலைவி. |

## தை

| | |
|---|---|
| தைத்தியர் | அவுணர். |
| தைரியம் | உறுதி, திட்பம், ஆண்மை, ஊக்கம். |
| தைலம் | எண்ணெய். |
| தைவிகம் | தெய்வச் செயலால் நேரிடுவது. |

## தோ

| | |
|---|---|
| தோடம், தோஷம் | குற்றம். |
| தோடா (உருது) | கைவளை. |
| தோத்திரம், ஸ்தோத்திரம் | வாழ்த்து, வழுத்து. |

## தௌ

| | |
|---|---|
| தௌகித்திரன் | மகள் பிள்ளை, பேரன். |
| தௌத்தியம் | புகழ்ச்சி. |
| தௌர்ப்பாக்கியம் | நல்வினையின்மை. |
| தௌர்ப்பல்லியம் | வலுக்குறைவு. |

## ந

| | |
|---|---|
| நகம் | உகிர். |
| நகரம் | நாடு. |
| நகல் (அராபி) | படி. |
| நகுலம் | கீரி. |
| நடராஜமூர்த்தி, நடராஜன் | கூத்தன், மன்றவாணன், அம்பலவாணன். |
| நடனம் | கூத்து. |
| நடுநிசி | நள்ளிரவு. |
| நட்சத்திரம் | விண்மீன், வான்மீன், உடு, நாண்மீன். |
| நட்டம், நஷ்டம் | கேடு. |
| நதி | ஆறு, யாறு. |
| நதிதீரம் | ஆற்றங்கரை. |
| நந்தபாலன் | கண்ணன், திருமால். |
| நந்தர் | இடையர். |

| | |
|---|---|
| நந்தவனம், நந்தனவனம் | பூந்தோட்டம், பூங்கா. |
| நபநம் | நீராடல். |
| நபர் (அராபி) | ஆள். |
| நபாதி | தோன்றாது. |
| நபும்ஸகம் | அலி, பேடி. |
| நபும்ஸகன் | அலி, பேடி, ஆண்டன்மையிலான். |
| நமஸ்காரம் | வணக்கம். |
| நமன் | காலன், கூற்றுவன், இயமன், மறலி. |
| நயம் | நன்மை. |
| நயனம் | கண். |
| நரகம், நரகு | நிரயம், அளறு. |
| நரகர் | கீழுலகத்தவர். |
| நரகாரி | திருமால். |
| நரபதி, நராதிபதி, நராதிபன் | அரசன். |
| நரர் | மக்கள். |
| நரலோகம் | மக்களுலகம். |
| நரவாகநன் | குபேரன். |
| நரன் | மனிதன். |
| நராந்தகன் | மக்களையழிப்பவன், இயமன். |
| நர்த்தனம் | கூத்து. |
| நவக்கிரகம் | ஒன்பதுகோள். |
| நவதானியம் | ஒன்பதுவகைத் தவசம். |
| நவத்துவாரம் | ஒன்பது வாயில், ஒன்பான் புழை. |
| நவநீதம் | வெண்ணெய். |

| | |
|---|---|
| நவமணி | பலதிறமணி. |
| நவம் | புதுமை, ஒன்பது. |
| நவரத்தினம் | ஒன்பதுவகை மணி. |
| நவராத்திரி | ஒன்பதிரவு. |
| நவியம் | கோடரி. |
| நவீன கலைஞானிகள் | புதுக்கலையறிஞர். |
| நவீனம் | புதுமை. |
| நளினம் | தாமரை, முளரி. |

## நா

| | |
|---|---|
| நாகம் | பாம்பு. |
| நாசகன் | அழிப்பவன். |
| நாசகாலம் | அழிவுகாலம், கெடுகாலம். |
| நாசம் | அழிவு, கேடு. |
| நாசி | மூக்கு. |
| நாசிகா சூரணம் | மூக்குத்தூள். |
| நாசித் துவாரம் | மூக்குப்புழை, மூக்கின் றுளை. |
| நாஸ்தி | இல்லை, இன்மை. |
| நாஸ்திகமதம் | தெய்வமில் கொள்கை. |
| நாஸ்திகம் | கடவுளுண்மையை மறுப்பது. |
| நாஸ்திகன் | தெய்வமில் கொள்கையன். |
| நாதசொரூபம் | ஒலிவடிவு. |
| நாதம் | ஒலி, ஓசை, செம்பால், செந்நீர். |
| நாதன் | தலைவன். |
| நாநாரூபம் | பலவகை வடிவம். |
| நாநாவிதம் | பலவகை. |
| நாபி | கொப்பூழ், உந்தி. |
| நாபிக்கமலம் | உந்தித்தாமரை. |
| நாபிதன், நாவிதன் | மயிர் வினைஞன். |

| | |
|---|---|
| நாமகரணம், நாமதாரணம் | பெயரிடுதல். |
| நாமதேயம், நாமம் | பெயர். |
| நாயகன் | தலைவன். |
| நாயகி | தலைவி. |
| நாராசம் | இருப்பாணி. |
| நாரிகேளம் | தேங்காய். |

## நி

| | |
|---|---|
| நிகர்வம் | செருக்கின்மை. |
| நிகிருட்டம் | இழிந்தது. |
| நிகேதம், நிகேதனம் | வீடு. |
| நிக்கிரகதானம் | தோல்வியிடம். |
| நிக்கிரகம், நிக்ரகம் | அழிக்கை, ஒறுப்பு. |
| நிக்கிரகித்தல் | ஒறுத்தல். |
| நிக்கேபம், நிக்ஷேபம் | வைப்பு, வைத்தல். |
| நிசம், நிஜம் | உண்மை, மெய். |
| நிசாசரர் | இரவிற்றிரிவோர், அரக்கர். |
| நிசாபதி | திங்கள். |
| நிசி | நள்ளிரவு. |
| நிசேதம், நிஷேதம், நிஷித்தம் | விலக்கு. |
| நிச்சயஞானம் | உண்மையறிவு, நல்லறிவு. |
| நிச்சயம் | உறுதி, மெய், துணிவு, திண்ணம். |

| | |
|---|---|
| நிச்சயித்தல் | உறுதிப்படுத்தல், உட்கோடல், துணிதல், முடிவுகட்டுதல், கடைப்பிடித்தல். |
| நிச்சிந்தை | எண்ணமற்றிருத்தல். |
| நிச்சுவாசம் | மூச்சொடுக்கம். |
| நிஷ்கருஷம் | உறுதி. |
| நிஷ்பட்சபாதம் | ஒருபுறங்கோடாமை. |
| நிட்களங்கம், நிஷ்களங்கம் | தூய்மை. |
| நிட்களம், நிஷ்களம், அவ்வியத்தம் | கலைப்பின்மை, உருவின்மை, அருவம். |
| நிட்காமியம், நிஷ்காமியம் | பயன்கருதாமை, விருப்பின்மை. |
| நிட்காரணம், நிஷ்காரணம் | காரணமின்மை. |
| நிட்டூரம், நிஷ்டூரம் | கொடுமை. |
| நிட்டை, நிஷ்டை | தவநிலை, துணிதல் நிலை. ஒருமைநிலை. |
| நிதம்பம் | அல்குல். |
| நிதரிசனம் | கண்கூடு. |
| நிதனம் | வீடு. |
| நிதானம் | மதிப்பு. |
| நிதி | செல்வம், வைப்பு, பொருள். |
| நிதித்யாசநம், நிதித்தியானம் | தெளிதல். |
| நிதிபதி | செல்வக் கடவுள். |
| நித்தியகருமம் | நாட்கடன், நாள்வினை. |
| நித்திய கர்மாநுட்டானம் | நாட்கடனாற்றல். |

நித்தியத்துவம் — அழிவின்மை.
நித்தியபூசை — நாள்வழிபாடு.
நித்தியம் — நாடோறும், எப்பொழுதும், அழியாமை.
நித்தியன் — அழிவிலான்.
நித்தியாநந்தம் — வீடுபேறு, பேரின்பம், அழிவிலின்பம்.
நித்திரை — தூக்கம், துயில், உறக்கம், கண்படை.
நித்திலம் — முத்து.
நிந்தனை, நிந்தை — இகழ்ச்சி, பழிப்பு.
நிந்தாஸ்துதி — இகழ்வதுபோற் புகழ்தல்.
நிந்திதம் — இகழப்பட்டது.
நிபந்தனை — கட்டுப்பாடு, உறுதி, ஏற்பாடு.
நிபாதம் — விழுதல், உடம்பொடு புணர்த்தல் (குறள்), பதித்தல்.
நிபுணர் — தேர்ந்தவர், வல்லவர்.
நிமலம் — அழுக்கின்மை.
நிமலன் — தூயோன், கடவுள்.
நிமிடம், நிமிஷம் — நொடிப்பொழுது, நொடி.
நிமித்தகாரணம் — துணைக்காரணம், வினைமுதல்.
நிமித்தகாரணன் — வினைமுதல்வன்.
நிமித்தம் — குறி, காரணம், பொருட்டு, அடையாளம்.
நிமித்திகன் — குறிசொல்வோன்.
நியதம் — உறுதி, (தரு) முறை, அடக்கம்.
நியதி — ஊழ், செய்கடன், ஒழுங்குமுறை, பிறழா நிகழ்ச்சி (சித்-தத்).

| | |
|---|---|
| நியமம் | ஒழுங்கு, முறை, நெறி, நாட்கடன். |
| நியமனம் | கட்டளை, ஒழுங்கு. |
| நியமித்தல் | அமைத்தல், ஏற்படுத்தல். |
| நியாயசபை, நியாயஸ்தலம் | அறமன்றம், முறைமன்றம். |
| நியாயமார்க்கம் | நெறிமுறை, அறமுறை, அறவழி. |
| நியாயம் | நெறி, முறை, நடுநிலை. |
| நியாயவாதி | வழக்கறிஞன். |
| நியாயாதிபதி | முறைமன்றத்தலைவர், நடுவர். |
| நியூனம் | குறைவு. |
| நியோகித்தல் | ஏவுதல், செலுத்தல். |
| நிரதிசயானந்தம் | பேரின்பம். |
| நிரநுயோச்சியம் | உடன்படாமை. |
| நிரநுயோச்சியாநுயோகம் | தோல்விநிலைகூறல். |
| நிரந்தரம் | எப்பொழுதும். |
| நிரந்தரன் | கடவுள். |
| நிரர்த்தம் | பொருளின்மை. |
| நிராகரணம் | மறுத்தல். |
| நிராசை | விருப்பின்மை, அவாவின்மை. |
| நிராடங்கம் | தடையில்லாமல். |
| நிராதாரம் | பற்றுக்கோடின்மை. |
| நிராபதம் | கேடின்மை. |
| நிராமயாத்மா, நிராமயாந்மா | இயற்கை யுணர்வினனாதல், கடவுள். |
| நிரீச்சுரவாதி, நிரீஸ்வரவாதி | கடவுளில்லை யென்போன், பாழ்ங்கோளன். |

| | |
|---|---|
| நிரீட்சணம் | பார்த்தல். |
| நிருணயம், நிர்ணயம் | உறுதி. |
| நிருத்தம் | கூத்து. |
| நிருத்தாட்சண்ணியம் | கண்ணோட்டமின்மை. |
| நிருபகாரம் | உதவியற்றது. |
| நிருபன் | மன்னன், அரசன். |
| நிருபித்தல், நிரூபித்தல் | மெய்ப்பித்தல், நிலைபெறுத்தல். |
| நிருமலம் | மாசின்மை. |
| நிருமலன் | மாசிலான். |
| நிருமித்தல் | ஏற்படுத்தல், உண்டாக்கல். |
| நிருமூலம் | அடியற்றது, அழிவு, வேரோடு கல்லல். |
| நிருவாகம், நிர்வாகம் | கொண்டு நடத்தல், பொறுப்பு. |
| நிருவாணம் | உடையின்மை, முண்டம், பற்றின்மை. |
| நிருவிகற்பக்காட்சி | எழுவாய்க் காட்சி. |
| நிருவிகற்பம் | ஒருமையுணர்ச்சி, வேறுபாடின்மை. |
| நிருவிகாரம் | வேறுபாடின்மை. |
| நிரூபணம் | நிலைநாட்டல். |
| நிர்க்குணோபாசனை | குணமில்லதன் வழிபாடு. |
| நிர்ச்சனம், நிர்மானுஷ்யம் | மக்களின்மை, மக்கட்புழக்கமின்மை. |
| நிர்ணயம் | முடிவு, உறுதி. |
| நிர்த்தமண்டபம் | நாடக அரங்கு. |
| நிர்நிமித்தம் | காரணமின்மை, ஏதுவின்மை. |

நிர்ப்பந்தம் — நெருக்கம், தொல்லை, இடர், வலுகட்டாயம்.
நிர்ப்பாக்கியம் — நல்வினை இன்மை, பொறியின்மை, பொருள் இன்மை.
நிர்மாணம் — செய்யப்பட்டது.
நிர்விசாரம் — கவலையின்மை.
நிவர்த்தனம் — திரும்புதல்.
நிவர்த்தி, நிவிர்த்தி — விடுதலை, நீக்கம்.
நிவாரணம் — விடுதலை.
நிவேதனம் — ஒப்புவித்தல், கொடுத்தல்.
நிவேதித்தல் — படைத்தல்.

## நீ

நீசகன், நீசன் — கீழ்மகன், தாழ்ந்தோன்.
நீசம் — இழிவு.
நீதம் — நன்னெறி.
நீதி — நெறி, முறை, அறம்.
நீதித்தலம், நீதிஸ்தலம் — முறைமன்றம்.
நீதிநூல் — அறநூல்.
நீதிமான் — சிறந்தோன், நடுவன், முறைமன்றுளன்.
நீலகண்டன் — கறைமிடற்றன், சிவன்.
நீலோற்பலம் — கருங்குவளை.

## நூ

நூதனம் — புதுமை.
நூபுரம் — காற்சிலம்பு.

## நே

| | |
|---|---|
| நேத்திரம் | கண். |
| நேமி | கடல், உருளை, வட்டம். |

## நை

| | |
|---|---|
| நைமித்திகம் | சிறப்புவிழா. |
| நையாயிகன் | அளவை நூலோன். |

## ப

| | |
|---|---|
| பகம் | கொக்கு. |
| பகவதி | இறைவி. |
| பகவன், பகவான் | கடவுள், பெருமான். |
| பகிஷ்காரம் | விலக்கு. |
| பகிரங்கம் | வெளிப்படை. |
| பகிரண்டம் | புறவுலகு. |
| பக்குவம் | தகுதி, நிலை. |
| பக்குவர் | கனிவுடையவர், தகுதியுடையவர். |
| பக்தன் | அன்பன். |
| பக்தி | அன்பு. |
| பக்திகாண்டம் | வழிபாடுதகுதொகுதி. |
| பங்கசம், பங்கஜம், பங்கயம், பங்கேருகம் | தாமரை, முளரி. |
| பங்கம் | குறை, பழுது, சேறு, குற்றம். |
| பங்கயாசனன் | தாமரையிருக்கையன், நான்முகன். |

| | |
|---|---|
| பசாசம், பிசாசு | பேய், அலகை. |
| பசாசன் | பேயன். |
| பசார், பஜார் } (பார்சி) | சந்தை, அங்காடி. |
| பசிதம் | திருநீறு, கொளுத்தப் பட்டது. |
| பசு | ஆ, உயிர். |
| பசுத்துவம் | உயிர்த்தன்மை. |
| பசுபதி | உயிர்த்தலைவன், சிவன். |
| பசுபாசம் | உயிர்களிடத்தன்பு. |
| பச்சாத்தாபம் | கழிவிரக்கம், இரக்கம். |
| பஸ்பம் | நீறு. |
| பஞ்சகஞ்சுகம் | ஐவகைச்சட்டை. |
| பஞ்சகவ்வியம், பஞ்சகௌவியம் } | ஆவினைந்து. |
| பஞ்ச கன்மேந்திரியங்கள் (சித்-தத்) [வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம்] | ஐந்துதொழிலுறுப்புகள்: வாய், கால், கை, எருவாய், கருவாய். |
| பஞ்சகிருத்தியம் | ஐந்தொழில். |
| பஞ்சக்கிலேசம் | ஐவகைக்குற்றம். |
| பஞ்சசத்தி | ஐவகையாற்றல். |
| பஞ்ச சிவதத்துவங்கள் (சித் - தத்) [சுத்தவித்தை, ஈசுவரம், சாதாக்கியம், சத்தி, சிவம்] | ஐந்து சிவநிலையப் பொருள்கள்: தூயநினைவு, தலைமை, அருள் நினைவு, அன்னை, அத்தன். |

பஞ்ச ஞானேந்திரியங்கள் (சித்-தத்) [தொக்கு, சிங்குவை, சட்சு, ஆக்கிராணம், சோத்திரம்] — ஐம்பொறிகள்: மெய், வாய், கண், மூக்கு, செவி.

பஞ்சதந்திரம் — ஐவகைச் சூழ்ச்சிகள்.

பஞ்சதன்மாத்திரைகள் (சித் - தத்) [இரசம், ரூபம், பரிசம், சத்தம், கந்தம்] — ஐந்து நுண்ணிய பொருள்கள்: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

பஞ்சதூபம் — ஐவகை மணப்பொருட்புகை.

பஞ்சநதம் — திருவையாறு.

பஞ்சபாதகம் — ஐங்கொடுவினை, ஐம்பெருங்குற்றம்.

பஞ்சபாதகன் — ஐம்பெருங் குற்றத்தான்.

பஞ்சபூதங்கள் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் — ஐந்து பருப்பொருள்கள்: மண், புனல், அனல், கால், விசும்பு.

பஞ்சமி, பஞ்சம் — ஐந்தாம் நாள், ஐந்து.

பஞ்சமூர்த்தி — ஐவகைக் கடவுளர்.

பஞ்சலட்சணம் — ஐந்திலக்கணம்.

பஞ்சலோகம் — ஐம்பொன்.

பஞ்சவர் — ஐவர்.

பஞ்சாக்கரம், பஞ்சாட்சரம் — ஐந்தெழுத்து.

பஞ்சாங்கம் — ஐந்துறுப்பு.

| | |
|---|---|
| பஞ்சாட்சர உபதேசம் | ஐந்தெழுத்தருணிலை, அறிவுறுப்பு. |
| பஞ்சாயம் | நடுவர் ஐவர் கூட்டம். |
| பஞ்சாவத்தை | ஐவகைநிலை. |
| பஞ்சேந்திரியம் | ஐம்பொறி. |
| படநம் | படித்தல், ஓதல், கற்றல், பயிலல். |
| படம் | ஓவியம். |
| படுதா (இந்து) | திரைச் சீலை. |
| பட்சணம் | தின்பண்டம். |
| பட்சதாபம், பட்சாத்தாபம் | இரக்கம், கண்ணோட்டம், கழிவிரக்கம். |
| பட்சபாதம் | ஓரம், ஒருபக்கம். |
| பட்சம் | உருக்கம், அன்பு. |
| பட்சி | பறவை, புள். |
| பட்சிராசன் | கலுழன், புள்ளரசு. |
| பட்டணப் பிரவேசம் | ஊர்வலம். |
| பட்டமகிஷி | பட்டத்தலைவி. |
| பட்டாபிஷேகம் | முடிசூட்டல். |
| பட்டுவஸ்திரம் | பட்டாடை. |
| பண்டி (சகடி) | வண்டி. |
| பண்டிகை | பெருநாள், திருவிழா. |
| பண்டிதன் | புலவன், அறிஞன், மருத்துவன். |
| பதகன் | கீழ்மகன், தாழ்ந்தோன். |
| பதச் சேதம் | சொற் பிரிப்பு, கண்ணழித்தல். |
| பதட்டம், பதஷ்டம் | பதறுதல், விரைதல், அஞ்சல். |
| பதம் | சொல், நிலை. |
| பதவி | நிலை. |

| | |
|---|---|
| பதாகை | பெருங்கொடி, கிளைக்கதை. |
| பதாதி | காலாள். |
| பதாத்வா | சொல்வழி. |
| பதாந்தரம் | வேறு நிலை. |
| பதார்த்தம் | சொற் பொருள் (தரு), பொருள். |
| பதி | கடவுள், தலைவன், கணவன், அரசன். |
| பதிபசுபாசம் | கடவுள், உயிர், உலகம், இறை, உயிர், தளை. |
| பதிவிரதம் | கற்பு. |
| பதிவிரதாதருமம் | கற்பு நெறி. |
| பதிவிரதாபத்தினி, பதிவிரதை | கற்பரசி, கற்புடையாள். |
| பதும தளம் | தாமரைத்தளிர், தாமரைஇலை. |
| பதுமநாபன், பத்மநாபன் | திருமால். |
| பதுமம், பத்மம் | தாமரை, முளரி. |
| பதுமன், பத்மன் | நான்முகன். |
| பதுமாசனம் | தாமரையிருக்கை. |
| பதுமாசனன், பத்மாசனன் | நான்முகன். |
| பதுமாவதி, பத்மாசநி | திருமகள். |
| பதுமை | பாவை. |
| பத்தகணம் | அன்பர் கூட்டம், தொண்டர் குழாம். |
| பத்தர், பக்தர் | அன்பர், தொண்டர். |

| | |
|---|---|
| பத்தா, பார்த்தா | கணவன். |
| பத்தி, பக்தி | அன்பு, நேயம், பற்று. |
| பத்திமார்க்கம் | அன்பு நெறி. |
| பத்தியம் | மருந்துணா, செய்யுள். |
| பத்திரம் | இலை. |
| பத்திரலிங்கம் | ஊட்டிடக் குறி. |
| பத்திரிகை | செய்தித்தாள், செய்தி, இதழ். |
| பந்தகம் | கட்டு. |
| பந்தநிவர்த்தி | கட்டறுத்தல், தளைநீக்கம். |
| பந்தபாசம் | பிறவிக்கட்டு. |
| பந்தம் | உறவு, தொடர்பு, சுற்றம், கட்டு. |
| பந்தனம் | கட்டல், பிறவிப் பிணிப்பு. |
| பந்தி | வரிசை, தொகுதி. |
| பந்துக்கள் | உறவினர், சுற்றத்தார், கிளைஞர். |
| பந்துவர்க்கம் | உறவின்முறை. |
| பந்நகம் | பாம்பு. |
| பந்நகாசயநம் | பாம்புப்படுக்கை, பாம்பணை. |
| பந்நகாசயநன் | திருமால். |
| பந்நசாலை | இலைக்குடில். |
| பயங்கரம் | கொடுமை, அச்சம். |
| பயசு, பயஸ் | பால், நீர். |
| பயபக்தி, பயபத்தி | அச்சமும் அன்பும். |
| பயம் | அச்சம். |
| பயாப்தி, பயோததி | பாற்கடல். |
| பயோதரம் | முகில், முலை, கொங்கை. |

| | |
|---|---|
| பயோதிகம் | கடனுரை. |
| பரகதி | வீடுபேறு, மேல்நிலை. |
| பரகமனம் | அயல்மனைச் சேறல், பிறன் கடை நிற்றல். |
| பரகாயப் பிரவேசம் | கூடுவிட்டுக் கூடுபாய்தல், பிறவுடற் புகுதல். |
| பரகாயம் | பிறவுடல். |
| பரகீதம் | பிறர்கூற்று, பிறர்புகழ்ச்சி. |
| பரசமயம் | புறச்சமயம். |
| பரசுகம் | மேலான இன்பம், பேரின்பம். |
| பரசுவம், பரஸ்வம் | பிறர் பொருள். |
| பரஸ்தானம், பிரஸ்தானம் | வழிச்செல்கை, புறப்பாடு. |
| பரஸ்நேகம் | பிறர் நட்பு. |
| பரஸ்பரம் | ஒருவருக்கொருவர். |
| பரஞானம் | உண்மை மேலறிவு, அருட் காட்சி. |
| பரஞ்சோதி | பேரொளி, கடவுள். |
| பரதசாத்திரம் | நாடக நூல். |
| பரதநம் | பிறர்பொருள். |
| பரதந்திரம் | அடிமைத்திறம். |
| பரதந்திரவயம் | பிறர்வழி. |
| பரதந்திரன் | பிறர்வழிப்பட்டவன். |
| பரதம் | கூத்து. |
| பரதாரகமனம் | பிறன்மனை விழைதல். |
| பரதாரம் | பிறர்மனை. |
| பரதேசம் | பிறர்நாடு, அயல்நாடு, வேற்றூர். |
| பரத்திரி, பரஸ்த்ரீ | பிறர்மனைவி. |

| | |
|---|---|
| பரத்துவம் | கடவுட்டன்மை, மேன்மை. |
| பரந்தாமன் | திருமால். |
| பரபட்சம் | எதிர்ப்பக்கம். |
| பரபுருடன் | அயலான். |
| பரபோகம் | பேரின்பம். |
| பரப்பிரம சொரூபம் | முழுமுதற்கடவுளுண்மை. |
| பரப்பிர்மம் | மிகப்பெரியது. |
| பரமகதி | வீடுபேறு, அடைக்கலம். |
| பரமகருத்தன், பரமகர்த்தா | மேலான தலைவன், கடவுள். |
| பரமசண்டாளன் | மிகக்கொடியோன். |
| பரமசத்துரு | கடும்பகைவன். |
| பரமசந்தோஷம் | பேருவகை, பெருங்களிப்பு, பெருமகிழ்ச்சி. |
| பரமசித்தி | வீடுபேறு. |
| பரமசுகம் | மேலான இன்பம். |
| பரமதுஷ்டன் | மிகக்கொடியோன். |
| பரமபதம் | வீடுபேறு. |
| பரமபுருஷன் | தக்கோன், மேலோன். |
| பரமம் | மேல், மேன்மை. |
| பரமரகசியம் | அருமறைப்பொருள். |
| பரமலோகம் | மேலுலகம். |
| பரமலோபி | ஈயாப்பிணி, வடிகஞ்சன், பிசுநன். |
| பரமவியோமம் | அருள்வெளி. |
| பரமன் | கடவுள், மேலானவன். |
| பரமாகாயம் | பெருவெளி. |
| பரமாதிசயம் | மேலான வியப்பு. |
| பரமாத்துமா, பரமான்மா | முற்றறிவிளக்கமுடைய முதல்வன், இறைவன், முழுமுதற் பொருள். |

| | |
|---|---|
| பரமாநந்தம் | பேரின்பம். |
| பரமாந்ம சைதன்யம் | முழுமுதற் பேரறிவு. |
| பரமார்த்தம் | மெய்ப் பொருள், முடிவான பொருள். |
| பரமுத்தி | மேல்நிலை வீடுபேறு. |
| பரமேசுவரன், பரமேசுரன் | இறைவன், கடவுள், சிவன். |
| பரமேசுவரி | திருமகள், இறைவி. |
| பரமேட்டி, பரமேஷ்டி | மேலான இடத்திலிருப்பவன். |
| பரமோட்சம் | வீடுபேறு. |
| பரமோபகாரம் | பேருதவி. |
| பரம் | மேன்மை, கடவுள், பழமை. |
| பரம்பரை | கால்வழி, தலைமுறை, வழி வழி. |
| பரர் | அயலார். |
| பரம்பொருள் | பேரறிவுப் பொருள், முழு முதற் பொருள். |
| பரலோகக் கிரியை | சாவுச்சடங்கு, இழவுச் சடங்கு. |
| பரலோகம் | மேனுலகம். |
| பரவசப்படுதல் | பெரிதும் இன்புறுதல். |
| பரவசம் | தன்னுணர்வின்மை. |
| பரவிந்தவம் | மேல்மாயை. |
| பரவிவேகம் | மெய்யறிவு. |
| பரன் | கடவுள், மேலானவன். |
| பராக்கிரமசாலி | ஆண்டகை. |
| பராக்கிரமம் | வலி, வன்மை, ஆண்மை. |
| பராசத்தி | இறைவி. |

| | |
|---|---|
| பராசயம், பராஜயம் | தோல்வி. |
| பராதீனம் | பிறர்க்குரியது. |
| பராபரவஸ்து, பராபரன் | மேலான கடவுள். |
| பராபவம் | தோல்வி, பெருமைக்குறைவு. |
| பராமரிசம் | ஆராய்ச்சி, பகுத்தறிவு. |
| பரிகரித்தல் | களைதல், மறுத்தல். |
| பரிகாசம் | பகடி, எள்ளனம். |
| பரிக்கிரகசத்தி | வைப்பாற்றல். |
| பரிசம் | ஊறு. |
| பரிசனம், பரிவாரம் | குடிமக்கள், ஏவலாளர். |
| பரிசாரகம் | ஏவல்வேலை, பணிவிடை. |
| பரிசாரகன் | ஏவல் செய்வோன், உடன் செல்வோன். |
| பரிசித்தல் | தொடுதல். |
| பரிசீலனம் | ஆராய்ச்சி. |
| பரிசுத்த சமித்துகள் | தூயவிறகுகள். |
| பரிசுத்த தர்மங்கள் | தூய அறவினைகள். |
| பரிசுத்த தீர்த்தம் | தூயதீம்புனல். |
| பரிசுத்தம் | தூய்மை, துப்புரவு, மாசின்மை, புனிதம். |
| பரிசுத்தன் | தூயோன், மாசிலான். |
| பரிசோதனை | ஆராய்ச்சி, தேர்வு. |
| பரிச்சேதம் | எல்லை, பிரிவு, பகுத்தறிதல். |
| பரிட்சை, பரீட்சை | ஆராய்ச்சி, தேர்வு. |
| பரிணமித்தல் | வேறுபடல், மாறுதல். |
| பரிணயம் | மன்றல். |
| பரிணாமம் | வேறுபாடு. |

| | |
|---|---|
| பரிணாமவாதி | ஒன்று பிறிதொன்றாகுமென்னுங் கொள்கையர். |
| பரிதாபம் | இரக்கம். |
| பரிதானம் | கைக்கூலி. |
| பரிபாலனம் | பாதுகாப்பு. |
| பரிபூரணம் | நிறைவு. |
| பரிபூரணி | இறைவி, எங்கும்நிறைந்தவள் |
| பரிமளசுகந்தம் | நறுமணம். |
| பரிமள தைலம் | நறுமண எண்ணெய். |
| பரிமளம் | நறுமணம், மகிழ்ச்சி. |
| பரிமாணம் | அளவு. |
| பரிமிதம் | அளவுபட்டது. |
| பரிமிதாகாரம் | மட்டான உணவு. |
| பரியங்கம் | கட்டில். |
| பரியந்தம் | வரை, எல்லை, அளவு. |
| பரிவாரம் | அரசியற் சுற்றம். |
| பருவகாலம் | தக்க காலம். |
| பருவதபுத்திரி | மலைமகள். |
| பருவதம், பர்வதம் | மலை. |
| பருவதாசயம் | முகில். |
| பருவபேதம் | காலவேறுபாடு. |
| பருவம் | காலம், பொழுது, பதம். |
| பரோட்சம் | இறந்தகாலம். |
| பரோபகாரம் | உதவி, கைம்மாறு கருதாவுதவி. |
| பர்க்கன் | பகலவன். |
| பர்ணசாலை | இலைக்குடில். |
| பர்ணம் | இலை. |
| பர்த்தா | கணவன். |

| | |
|---|---|
| பர்வதராஜபுத்திரி | மலையரசன் மகள். |
| பர்வதராஜன் | மலையரசன். |
| பலகீனம், பலஹீனம் | வலுக்குறைவு, தளர்ச்சி. |
| பலபட்சணம் | கனியுணவு. |
| பலம் | பழம், வலிவு. |
| பலவான் | வலுவினன், வன்மையாளன். |
| பலன் | பயன். |
| பலாத்காரம், பலவந்தம் | வலுக்கட்டாயம். |
| பலாபலம், பலாபலன் | பயன் பயனின்மை. |
| பலி | இரை, காணிக்கை, வேள்வி, கடவுளுணா, ஒப்புவித்தல். |
| பலிதம் | வாய்ப்பு. |
| பலித்தல் | கைகூடுதல், பயன்றருதல். |
| பலிபீடம் | வேள்விமேடை, படையல் மேடை. |
| பவபந்தம் | பிறவிக்கட்டு, பிறவிப்பிணி. |
| பவம் | பிறப்பு. |
| பவனன் | காற்று. |
| பவன் | கடவுள். |
| பவானி | உமை. |
| பவித்திரம் | தூய்மை, தருப்பைப்புல், விரலணி. |

## பா

| | |
|---|---|
| பாகசாலை | அடுக்களை. |
| பாகம் | கூறு. |
| பாகு, வாகு | தோள். |
| பாகுபலம் | தோள்வலி. |
| பாக்கியசாலி, பாக்கியவான் | செல்வன், நல்வினையாளன். |
| பாக்கியம் | பேறு, செல்வம், நல்வினை. |
| பாக்யவதி | செல்வி. |
| பாசபந்தம் | அன்புக்கட்டு. |
| பாசம் | தளை, கட்டு, கயிறு, அன்பு. |
| பாஷா, பாஷை | மொழி. |
| பாஷாதோஷம் | மொழிக்குற்றம். |
| பாஷாப்பிரயோகம் | மொழிவழக்கு. |
| பாஷிதம், பாடிதம் | பேசப்பட்டது, சொல்லப்பட்டது. |
| பாஷ்பம், பாட்டம் | கண்ணீர். |
| பாஸ்கரன் | செஞ்சுடர், கதிரோன். |
| பாடனம் | பேசல், சொல்லல். |
| பாடாணம்; பாஷாணம் | நஞ்சு. |
| பாடியம், பாஷ்யம் | அகலவுரை, விரிவுரை, பேருரை. |
| பாணம் | கணை, அம்பு. |
| பாணி | நீர், கை. |
| பாணிக்கிரகணம் | கைப்பற்றல், கைப்பிடி. |
| பாண்டித்தியம் | கல்வித்திறன். |
| பாதகம் | தீமை. |

| | |
|---|---|
| பாதகன் | தீயோன். |
| பாத சதங்கை | காலணி. |
| பாதசரம் | கால்சிலம்பு. |
| பாதசுத்தி | கால் கழுவல். |
| பாதசேவை | திருவடித்தொண்டு. |
| பாதசைலம் | தாள்வரை. |
| பாததட்சிணை | திருவடிக்காணிக்கை. |
| பாதபங்கயம் | திருவடித்தாமரை. |
| பாதபீடம், பாதபீடிகை | திருவடி இருக்கை. |
| பாதபூசை | திருவடிவழிபாடு. |
| பாதம் | தாள், கால், (சித்-தத்) அடி. |
| பாதரட்சணம், பாதரட்சை | காற்பரடு. |
| பாதலம் (பாதாளம்) | கீழுலகு, கிடங்கு, குகை, ஆழம். |
| பாதாதிகேச பரியந்தம் | தாள்முதல் முடிவரை. |
| பாதாரவிந்தம் | திருவடித்தாமரை. |
| பாதாளாஞ்சனம் | புதையலறி மை. |
| பாதுகம், பாதுகை | மிதியடி. |
| பாதை | வழி, பாட்டை. |
| பாதோதகம் | மரம், கால்கழுவும் நீர். |
| பாத்திபன், பார்த்திபன் | அரசன். |
| பாத்தியஸ்தன் | உரிமையாளன். |
| பாத்தியம் | உரிமை. |
| பாத்திரம் | ஏனம், கலம், தகுதி, உரிமை. |
| பாத்திரன் | தக்கவன், உரியவன். |

| | |
|---|---|
| பானகங்கள் | தீவிய நீர்கள். |
| பானகம் | பருகுநீர், குடிநீர். |
| பானம் | பருகல், குடித்தல். |
| பாபமார்க்கம் | தீயவழி. |
| பாபமோசனம் | தீவினை நீக்கம். |
| பாபம், பாவம் | குற்றம், தீமை, தீவினை மறம். |
| பாபாத்துமா | தீய உயிர். |
| பாபி, பாபிஷ்டன் | தீவினையாளன். |
| பாமரன் | அறிவிலான், கீழ்மகன். |
| பாயுரு, குதம் | எருவாய் (சித். தத்), மலவாய். |
| பாரதி | கலைமகள், கலைவல்லான். |
| பாரபட்சம் | ஓரம், ஒருபால், ஒருசார்பு. |
| பாரமார்த்திகம் | உண்மை நிலை. |
| பாரம் | சுமை, பொறை, கடமை. |
| பாரிசம் | பக்கம். |
| பாரிசாதம் | பவளமல்லிகை. |
| பாரிசேட ப்ரமாணம் | ஒழிபளவை, மீட்சியளவை. |
| பாரியாள், பாரிமை, பாரியா | மனைவி. |
| பார்த்திபன் | வேந்தன், மன்னன். |
| பார்வதி | மலைமகள். |
| பாலகன் | குழந்தை. |
| பாலப்பருவம் | பிள்ளைப்பருவம். |
| பாலனம் | காவல், பாதுகாத்தல். |
| பாலியர், பால்யர் | இளைஞர். |
| பாவகம் | தோற்றம், கற்பனை, உண்மையியல் நடை, அகவெளிப் பாட்டு நடை. |

பாவநாசம் — தீவினை ஒழித்தல்.
பாவவிமோசனம் — தீவினை நீக்கம்.
பாவனம் — கருதல், தூய்மை.
பாவனை — கற்பனை, ஒப்பு, எண்ணம், நினைப்பு.
பாவாத்துமா — தீவினைப்பிறவி, கெட்ட உயிர்.
பாவி, பாபி — தீயோன்.
பாவித்தல் — கருதல், எண்ணல், நினைத்தல்.
பாற்கரன், பாஸ்கரன் — பகலோன்.
பானு — அரசன், ஒளி, ஞாயிறு.

## பி

பிகம் — குயில்.
பிங்கலநாடி — வலப்பால் நாடி.
பிங்கலை — வலது மூச்சு.
பிசாசம், பிசாசு — பேய், அலகை.
பிச்சாபாத்திரம் — இரப்போர் கலம், திருவோடு.
பிச்சை, பிச்சா, பிட்சை — இரப்பு, ஐயம்.
பிஞ்ஞகம் — தலைக்கோலம்.
பிஞ்ஞகன் — தலைக்கோலமுடையவன், சிவபிரான்.
பிட்சான்னம் — ஏற்றுணு, இரப்புணு.
பிடிவாதம் — விடாப்பிடி.
பிண்டசரீரம் — யாக்கை, உடம்பு.
பிண்டம் — பருப்பொருள் (கரு), உடல், சிற்றுலகு, கரு.
பிண்டவிர்த்தி — கருவளர்ச்சி.

| | |
|---|---|
| பிதா | தந்தை, தகப்பன், அத்தன். |
| பிதிரர் | மூதாட்கள். |
| பிதிரார்ச்சிதம் | முன்னோர்தேட்டம். |
| பிதிர்க்கடன் | மூதாட்கள் கடன், தென்புலத்தார் கடன். |
| பிதிர்க்காரியம், பிதிர்க்கிரியை | மூதாட்கள் கடன், மூதாட்சடங்கு, தென்புலத்தார் கடன். |
| பிதுர் தேவர் | தென்புலத்தார். |
| பிதுர் யாகம் | நீர்க்கடனாற்றல். |
| பிநாகபாணி | சிவன், விற்கையன், சூலமேந்திய கையன். |
| பிநாகம் | வில், சூலம். |
| பிந்நம் | சிதைவு, வேறுபாடு. |
| பிம்பம் | சாயல். |
| பிரகஸ்பதி | வியாழன், செம்பொன், வானோர்குரு. |
| பிரகடனம் | விளம்பரம். |
| பிரகரணம் | பகுதி. |
| பிரகாசம் | ஒளி, துலக்கம், வெளிச்சம். |
| பிரகாசித்தல் | விளங்கல், நிலவுதல், ஒளிர்தல், இலங்குதல். |
| பிரகாரம், பிராகாரம் | கோயிற் சுற்று. |
| பிரகிருதம் | உண்டாக்கப்பட்டது, துவக்கம். |
| பிரகிருதி | இயற்கை, பகுதி. |
| பிரகிருதி சாஸ்திரம் | இயற்கைப்பொருள் |
| பிரகிருதி ஞானம் | உலகியலறிவு. |
| பிரகிருதி மாயை | பகுதிமாயை. |

| | |
|---|---|
| பிரக்ஞை, பிரக்கினை | உணர்வு. |
| பிரசக்தி | அருள். |
| பிரசங்கம் | விரிவுரை, சொற்பொழிவு. |
| பிரசண்டமாருதம் | பெருங்காற்று, பெரும்புயல். |
| பிரசண்டம் | மிகுதி. |
| பிரசண்டவேகம் | மிகு விரைவு. |
| பிரசண்டன் | வலியன். |
| பிரசன்னமாதல் | வெளிப்படல், தோன்றல். |
| பிரசம் | தேன். |
| பிரசம்சித்தல் | போற்றல், புகழ்தல். |
| பிரசவம் | பிள்ளைப்பேறு, கருவுயிர்ப்பு. |
| பிரசவவேதனை | பேறுகாலத் துன்பம், வயா. |
| பிரசா, பிரஜா, பிரஜை | குடிகள். |
| பிரசாதம் | கடவுளுணா, தேவுணா, படைப்பு, அருள். |
| பிரசாபதி | அரசன், உயிர்கட்குத் தலைவன், நான்முகன். |
| பிரசாரகர் | விரிவுரையாளர், விளம்பர காரர். |
| பிரசாரம் | பரப்புதல். |
| பிரசித்தம், பிரசித்தி | வெளிப்படை, அறிவிப்பு, புகழ்பரவல். |
| பிரசுரம் | வெளியீடு. |
| பிரஞ்ஞை | அறிவு, உணர்ச்சி. |
| பிரணயகலகம் | ஊடல், கலவியிற் பிணங்கல். |
| பிரணயம் | நம்பிக்கை, அன்பு, நேயம், கலவி. |
| பிரணவம் | ஓங்காரம். |
| பிரணவரூபம் | ஓங்கார வடிவம். |

| | |
|---|---|
| பிரணவவிகாசம் | ஓங்கார விளக்கம். |
| பிரதக்கணம், பிரதட்சணம், பிரதட்சணீகரணம் | வலம்வரல், வலஞ்சுற்றி வருதல். |
| பிரதமம் | முதல், துவக்கம், தொடக்கம். |
| பிரதாபம் | உயர்வு, புகழ், மேன்மை. |
| பிரதானம் | முதன்மை, சிறப்பு. |
| பிரதானி | அரசியற் றலைவர், முதல்வர். |
| பிரதி | படி. |
| பிரதிகூல காலம் | மாறுபட்ட காலம், போங்காலம். |
| பிரதிகூலம் | மாறுபாடு, எதிர். |
| பிரதிக்கினை, பிரதிக்ஞா, பிரதிக்ஞை, | உறுதி, ஆணை, மேற்கோள், நேர்தல். |
| பிரதிக்ஞா விரோதம் | மாறுபட்ட மேற்கோள் (தரு). |
| பிரதிட்டை, பிரதிஷ்டை | நிலைபெறுத்தல், கோயில் கொள்ளுவித்தல், கடவுள் மங்கலஞ் செய்தல் (சிலப்). |
| பிரதிதானம் | கைம்மாறு. |
| பிரதிதினம் | நாடோறும், ஒவ்வொரு நாளும். |
| பிரதிதொனி, பிரதித்வனி | எதிரொலி. |
| பிரதிநாதம் | எதிரொலி. |
| பிரதிநிதி | ஆணையாளர். |
| பிரதிபட்சன் | எதிரி. |
| பிரதிபதம் | ஒத்த சொல். |
| பிரதிபந்தகம், பிரதிபந்தம் | கட்டுப்பாடு, தடை. |

| | |
|---|---|
| பிரதிபலனம் | எதிர்த்தோற்றம், எதிர் விளக்கம், உருநிழல். |
| பிரதிபலித்தல் | எதிர்தோன்றல். |
| பிரதிபாதித்தல் | எடுத்தோதல். |
| பிரதிபாலித்தல் | பாதுகாத்தல், ஓம்பல். |
| பிரதிபிம்பம் | எதிர்நிழல், எதிர்ச்சாயல். |
| பிரதிபை, பிரதிபா | அறிவு. |
| பிரதிமை | சிலை, பாவை. |
| பிரதியுத்தரம் | மறுமொழி, நேர்விடை. |
| பிரதியுபகாரம், பிரத்தியுபகாரம் | கைம்மாறு. |
| பிரதிவாக்கியம் | மறுமொழி. |
| பிரதிவாதம் | எதிர்வழக்கு. |
| பிரதிவாதி | எதிர்வழக்காளி, எதிராளி. |
| பிரதீகாரி | வாயிற்காவலன். |
| பிரதேசம் | இடம். |
| பிரத்தாபம், பிரஸ்தாபம் | அறிவித்தல், வெளிப்படுத்தல். |
| பிரத்தியக்கம், பிரத்தியட்சம் | கண்கூடு, தெளிவு.' |
| பிரத்தியக்ஷப் பிரமாணம் | காண்டலளவை (தரு). |
| பிரத்தியாகாரம் | தொகைநிலை, ஐந்தவித்தல். |
| பிரத்தியேகம் | தனிமை. |
| பிரத்துவஞ்சாபாவம் | அழிவுபாட்டின்மை. |
| பிரபஞ்சபந்தம் | உலகக்கட்டு. |
| பிரபஞ்சம் | உலகம். |
| பிரபஞ்சவாசனை | உலகத் தொடர்பு. |

| | |
|---|---|
| பிரபஞ்சவியாபாரம் | உலகவாழ்வு, உலகநடை, உலகப்போக்கு. |
| பிரபஞ்சவிருத்தி | உலகப் பெருக்கம், உலகச் செய்கை. |
| பிரபஞ்ச வைராக்கியம் | உலக வெறுப்பு. |
| பிரபஞ்சாசாரம் | உலக ஒழுக்கம். |
| பிரபந்தம் | நூல், நூற்றொகுதி. |
| பிரபலம், பிரபல்லியம் | புகழ், முதன்மை, சிறப்பு. |
| பிரபவம் | பிறப்பு. |
| பிரபா, பிரபை | ஒளி. |
| பிரபாதசமயம் | விடியற்காலை. |
| பிரபாவம் | புகழ், பெருமை. |
| பிரபு | பெருந்தகை, பெருஞ்செல்வன், தலைவன். |
| பிரமக்கியானம் | கடவுளையறியுமறிவு, மெய்யறிவு. |
| பிரமசரியம் | ஓதுநிலை, கல்விநிலை. |
| பிரமசாரி | மணமாகாதவன். |
| பிரமஞானி | மெய்யுணர்வினன். |
| பிரமதேவன் | நான்முகன். |
| பிரமபுரம் | சீகாழி. |
| பிரமம் | கடவுள், முதல். |
| பிரமா | நான்முகன். |
| பிரமாணம் | அளவை (தரு), தலைமை, மேற்கோள், ஆணை, கட்டளை. |
| பிரமாண்டம் | பேருலகம். |

பிரமாதம் — மிகுதி.
பிரமானந்தம் — பேரின்பம்.
பிரமித்தல் — மலைத்தல், திகைத்தல், மருளல்.
பிரமேயம் — அளக்கப்படும் பொருள் (தரு), அறியப்படும் பொருள்.
பிரமை — மயக்கம், அறியாமை.
பிரமோற்சவம் — பெருவிழா.
பிரயத்தனம் — முயற்சி.
பிரயாசம், பிரயாசை — முயற்சி, வருத்தம், பாடு, உழைப்பு, தொல்லை.
பிரயாணம் — பயணம், வழிப்போக்கு, வழிச்செலவு, செலவு.
பிரயாணி — வழிப்போக்கன்.
பிரயோகம் — செலுத்தல், பயன்படுதல்.
பிரயோசனம் — பயன்.
பிரலாபம் — பயனில்சொல்.
பிரவருத்தனம் — முயற்சி, சொல்லுதல்.
பிரவர்த்தி, பிரவிருத்தி — முயற்சி, செய்கை.
பிரவாகநித்தம் — வெள்ள நிலை.
பிரவாகம் — வெள்ளப் பெருக்கு.
பிரவாகித்தல் — பெருக்கெடுத்தல்.
பிரவிடை — பூப்பு.
பிரவேசம் — நுழைவு, முயற்சி.
பிரவேசித்தல் — நுழைதல், உட்செல்லல்.
பிரளயம் — அழிவுகாலம், உலக ஒடுக்கம், வெள்ளம்.
பிரளயாகலர் — இருமலத்தர்.

| | |
|---|---|
| பிராகபாவம் | முன் இன்மை (தரு). |
| பிராகிருதபிரளயம் | உலக அழிவுக்காலம், ஊழிக்கால வெள்ளம். |
| பிராசங்கிகம் | சார்புப் பொருள் (தரு). |
| பிராசனம் | சோறூட்டல். |
| பிராசீனம் | பழமை. |
| பிராசீனாவீதம் | பூணூல்வலத்தோளி லணிதல். |
| பிராணசகி | உயிர்த்தோழி.. |
| பிராணசங்கடம் | உயிர்த்துன்பம். |
| பிராணசத்தி | உயிராற்றல். |
| பிராணசத்து | உயிர்ப்பொருள். |
| பிராணசிநேகிதன் | உயிர்த்தோழன், ஆருயிர் நண்பன். |
| பிராணச் சேதம் | உயிர்க்கொலை, உயிர்க்கேடு. |
| பிராணத்தியாகம் | உயிர்க்கொடை. |
| பிராணநாதன் | உயிர்த்தலைவன், கணவன். |
| பிராணநாயகி | உயிர்த்தலைவி, மனைவி. |
| பிராணமயகோசம் | வளியுடம்பு. |
| பிராணலயம் | உயிரொடுக்கம். |
| பிராணவாயு அப்பியாசம் | மூச்சுவிடும் பழக்கம். |
| பிராணவாயு | உயிர்க்காற்று, உயிர்வளி. |
| பிராணன் | உயிர்ப்பு. |
| பிராணாக்கினி | உயிர்த் தீ. |
| பிராணாதாரம் | உயிர் நிலைக்களன். |
| பிராணாபாயம் | உயிர்க்கேடு. |
| பிராணாயாமம் | வளிநிலை, வளியுள்ளடக்கல், மூச்சுப்பழக்கம். |
| பிராணான்மவாதம் | மூச்சே உயிரெனும் வழக்கு. |

பிராணி — உயிருடையது, சிற்றுயிர்.
பிராணி சாஸ்திரம் — உயிர் நூல்.
பிராணேசன் — கணவன்.
பிராதக்காலம் — விடியற்காலம்.
பிராது (அரபி) — முறையீடு; முறைப்பாடு.
பிராந்தி — நிலையின்மை, மயக்கம்.
பிராபவம் — முதன்மை.
பிராப்தம் — கிடைத்தது, பேறு.
பிராப்தி — அடைதல், பெறுதல்.
பிராயச்சித்தம் — கழுவாய், குற்ற நீக்கம்.
பிராயம் — அளவு, ஆண்டு, அகவை.
பிராரத்தகன்மம் — தூய்வினை, நுகர்வினை, துவக்க வினை.
பிராரப்தம், பிராரத்தம் — ஊழ்வினை.
பிரார்த்தனை — நேர்த்திக்கடன், வேண்டுகோள்.
பிரார்த்தித்தல் — வேண்டல்.
பிரியம் — அன்பு, விருப்பம், விழைவு.
பிரியவசனம் — இன்சொல், இன்னுரை.
பிரியன் — கணவன், தலைவன், தோழன், நண்பன்.
பிரியா, பிரியை — பெண், காதலி.
பிரீதம் — உகப்பு, விருப்பம்.
பிரீதி — அன்பு, உருக்கம், அவா, உவகை.
பிருதிவி — நிலம், மண்.
பிருதிவி தத்துவங்கள் (சித்-தத்) — நிலத்துப்பொருள்கள்.
பிருதிவிலிங்கம் — மண் அருட்குறி.
பிரேதசம்ஸ்காரம் — பிணச்சடங்கு.

பிரேதம் — பிணம்.
பிரேரகம் — ஏவுதல்.
பிரேரித்தல் — தோற்றுவித்தல், நடத்தல்.

## பீ

பீசம், பீஜம் — முளை, மூலம், விதை.
பீசாட்சரம் — மூல எழுத்து.
பீடம் — இருக்கைமேடை.
பீடிகை — இருக்கை, பூந்தட்டு, முகவுரை.
பீடை — துன்பம், பீழை, நோய்.
பீதாம்பரம் — பொற்பட்டாடை.
பீதி — அச்சம்.
பீபத்ச ரசம் — இளிவரற்சுவை.
பீமநாதம் — பேரொலி.
பீமம் — அச்சம், பருமம்.

## பு

புசங்கம், புயங்கம், புஜங்கம் — பாம்பு.
புசபலம், புஜபலம், புயபலம் — தோள்வலி.
புசம், புஜம், புயம் — தோள்.
புஸ்தகம், புத்தகம் — சுவடி, நூல்.
புஞ்சம் — குவியல்.
புடகம் — இலைக்கலம், தாமரை.
புட்கரம், புஷ்கரம் — அம்பு, நிறைவு.

| | |
|---|---|
| புட்கரி | யானை. |
| புட்பசயனம் | பூம்பள்ளி, பூவணை. |
| புட்பம், புஷ்பம் | பூ, மலர். |
| புட்பரசம் | பூந்தேன். |
| புட்பராகம் | வெள்ளைக்கல். |
| புட்பரேணு | பூந்துகள். |
| புட்பவதி | பூப்பானவள். |
| புட்பவிமானம், புஷ்பகவிமானம் | பூந்தேர். |
| புட்பாசனம் | பூவிருக்கை. |
| புட்பாசனி | திருமகள், பூமகள், கலைமகள். |
| புஷ்டி | பருமன், தடிப்பு. |
| புண்டரம் | வெண்டாமரை, குறி, நெற்றிக் குறி. |
| புண்டரீகம் | தாமரை. |
| புண்ணியசரீரம் | புனித உடம்பு. |
| புண்ணியக்ஷேத்திரம் | தூய இடம். |
| புண்ணியதலம் | திருப்பதி. |
| புண்ணியதினம் | நன்னாள். |
| புண்ணிய பாவம் | நல்வினை தீவினை, அறம் மறம். |
| புண்ணியம் | நல்லூழ், நல்வினை, அறம். |
| புண்ணியாவசனம் | புனிதமாக்குதல். |
| புத்தி | உணர்ச்சி, அறிவு (சித்-தத்). |
| புத்தி தத்துவம் | அறிவுப் பொருள் (சித்-தத்). |
| புத்திஹீனம் | அறிவின்மை, மடமை. |
| புத்திரசம்பத்து | மக்கட்பேறு. |
| புத்திரசுவீகாரம் | பிள்ளையெடுப்பு. |
| புத்திரபாக்கியம் | பிள்ளைச் செல்வம், பிள்ளைப் பேறு. |

| | |
|---|---|
| புத்திரமார்க்கம் | மைந்தநெறி, மகவுநெறி. |
| புத்திரன் | புதல்வன், மகன், மைந்தன், காண்முளை. |
| புத்திரி | புதல்வி, மகள். |
| புத்புதம் | நீர்க்குமிழி. |
| புநருத்தம் | கூறியது கூறல். |
| புநர்விவாகம் | மறுமணம். |
| புமான் | ஆடவன். |
| பும்சத்துவம் | ஆண்டன்மை. |
| புராணம் | பழங்கதை, பழைய வரலாறு. |
| புராதனம் | பழமை. |
| புராரி | சிவன். |
| புராவிருத்தம் | பண்டை நிகழ்ச்சி. |
| புருஷத்துவம் | ஆண்டன்மை. |
| புருஷமேதம் | ஆண்மகனைக்கொன்று வேட்கும் வேள்வி. |
| புருடன், புருஷன் | ஆண்மகன், மகன் (சித்-தத்), கணவன், கொழுநன். |
| புருடார்த்தம், புருஷார்த்தம் | உறுதிப்பொருள். |
| புருடோத்தமன் | ஆடவரிற் சிறந்தோன். |
| புரோகிதன் | வேள்விசெய்வோன். |
| புரோக்கணம், புரோக்தம் | சொல்லப்பட்டது. |
| புரோட்சணம், புரோட்சணை | தெளித்தல். |
| புரோவாதம் | முன்மொழிதல். |
| புவனம், புவனி, புவி | உலகம், வையகம், நிலம், இடம். |

| | |
|---|---|
| புவனாத்துவம் | உலக வழி. |
| புளகம், புளகிதம் | மயிர் சிலிர்த்தல், மயிர்க்கூச்செறிவு. |
| புனர்செனனம், புனர்சென்மம் | மறுபிறப்பு. |
| புனர்ப்பாகம் | சோற்றின்மறுபால், தெனா. |
| புனர்விவாகம் | மறுமணம். |

## பூ

| | |
|---|---|
| பூகம் | உருண்டை. |
| பூகம்பநம், பூகம்பம் | நில நடுக்கம். |
| பூகோளசாஸ்திரம் | நிலநூல். |
| பூசகன், பூஜகன், பூசாரி | வழிபாடு செய்வோன். |
| பூசாவிதி | வழிபாட்டு முறை. |
| பூசை, பூஜை, பூசனை | வழிபாடு, வணக்கம். |
| பூஷணம், பூடணம் | அணிகலன், அணி. |
| பூச்சியம் | இன்மை, அருமை. |
| பூஸ்திதி | நிலச்செல்வம். |
| பூதசரீரம், பூதனாசரீரம் | பருவுடல். |
| பூதபௌதிகம் | இயற்கைப் பொருள். |
| பூதம் | முதற்பொருள், முதல், புலன், பேய். |
| பூதரம் | மலை. |

| | |
|---|---|
| பூதலம் | நிலம், உலகு. |
| பூதாகாயம் | இடைவெளி, வான்வெளி. |
| பூதி | துகள், தூள். |
| பூபாலன் | அரசன். |
| பூமி | நிலம், உலகு. |
| பூமிதேவி, பூமாதேவி | நிலமகள். |
| பூமிபாரம் | நிலச்சுமை. |
| பூரகம் | உள்ளிழுத்தல், உட்கொள்ளு தல், நிரப்புதல். |
| பூரணகும்பம் | நிறைகுடம். |
| பூரணசந்திரன் | உவா, முழுநிலா. |
| பூரணபரிபக்குவம் | நிரம்பிய அருணிலை. |
| பூரணபலன் | நிறைபயன், முழுப்பயன். |
| பூரணமனம் | உளநிறைவு, முழுமனம். |
| பூரணம் | நிறைவு, எல்லாம், முடிபு. |
| பூரணவித்தை | முழுக்கல்வி, நிரம்பியகல்வி. |
| பூரணை | நிறையுவா, முழு நிலா. |
| பூரித்தல் | நிறைதல். |
| பூர்த்தி | நிறைவு. |
| பூர்வ செனனம், பூர்வ ஜெனனம் | முற்பிறப்பு. |
| பூர்வசென்ம கருமம் | முற்பிறவி, வினை, பழவினை. |
| பூர்வசென்மம் | முற்பிறப்பு. |
| பூர்வம் | பழமை, தொன்மை, முன், கிழக்கு. |
| பூர்வீகம் | பழமை. |

## பெ

| | |
|---|---|
| பெத்தான்மா | கட்டுற்ற உயிர். |

## பே

| | |
|---|---|
| பேதகம் | வேறுபாடு. |
| பேதபாவனை | ஒன்றை மற்றொன்றாக நினைத்தல். |
| பேதம், பேதநம் | ஒவ்வாமை, வேற்றுமை, வேறுபாடு. |
| பேதவாதி | வேற்றுமைக் கொள்கையர். |
| பேதாபேதம் | வேற்றுமை ஒற்றுமை. |
| பேதாபேதவாதி | வேற்றுமை ஒற்றுமைக் கொள்கையர். |
| பேதி | கழிச்சல். |

## பை

| | |
|---|---|
| பைசந்திவாக்கு | நினைவோசை. |
| பைசாசம் | பேய், பேய்நிலை. |
| பைத்தியக்கார ஆஸ்பத்திரி | வெறிகொண்டார் விடுதி. |
| பைத்தியம் | பித்து, வெறி, கோட்டி. |

## பொ

| | |
|---|---|
| பொக்கஷம் (தெலுங்கு) | பொருட்களஞ்சியம், பண்டாரம். |

## போ

| | |
|---|---|
| போகசிவன் உத்தியுத்தன், சகளநிஷ்களன் | ஏவற்சிவன். |
| போகபூமி | விளைநிலம், இன்ப உலகு, துய்ப்பிடம். |

| | |
|---|---|
| போகம் | இன்பம், துய்ப்பு, நுகர் பொருள். |
| போசனபதார்த்தம் | உணவுப் பொருள். |
| போசனப்பிரியன் | உணவு வேட்கையன். |
| போசனம், போஜனம் | உணவு, சோறு, உண்டி, ஊண். |
| போசன் | செல்வன். |
| போஷகன் | காப்போன். |
| போஷணை | நுகர்பொருள். |
| போஷித்தல் | காப்பாற்றல், வளர்த்தல். |
| போதகன் | கற்பிப்போன், ஆசிரியன். |
| போதம் | அறிவு. |
| போதனை | கற்பனை. |
| போதித்தல் | கற்பித்தல், அறிவுறுத்தல். |
| போதை | வெறி, மயக்கம். |
| போநகம் | சோறு, உணவு. |
| போர்வீரன் | போர்மறவன். |

## பௌ

| | |
|---|---|
| பௌதிகசரீரம் | பருவுடல். |
| பௌதிகசாஸ்திரம் | இயற்கைப் பொருள்நூல். |
| பௌத்திரன் | பேரன். |
| பௌத்திரி | பேர்த்தி. |
| பௌமம் | மண்ணிலிருப்பது (தரு). நிலத்திற் பிறப்பன. |
| பௌருஷம் | ஆண்டன்மை, முயற்சி. |
| பௌர்ணமி | முழுநிலா. |
| பௌவம் | கடல். |

## ம

| | |
|---|---|
| மகத்து | பெரிது. |
| மகத்துவம் | மேன்மை, பெருமை. |
| மகம் | வேள்வி. |
| மகரகேதநன் | காமன். |
| மகரசங்கிராந்தி | தைத்திங்கட் பிறப்பு. |
| மகரந்தம் | பூந்துகள். |
| மகரம் | சுறுமீன், முதலை. |
| மகராசன், மகாராசன் | அரசன், செல்வன். |
| மகராசி | செல்வி. |
| மகரிஷி | மாமுனிவர். |
| மகா | பெரிய, மிகுதி, மேன்மை. |
| மகாகாசம் | பெருவெளி. |
| மகாசங்காரம், மகாப்பிரளயம் | பேரழிவு, மாப்பேருழிக் காலம். |
| மகாதரும தேவதை | அறப்பெருங் கடவுள். |
| மகாதேவன் | முழுமுதற் கடவுள், சிவன். |
| மகாதேவி | இறைவி. |
| மகாத்மா | பெரியோன். |
| மகாநுபாவர் | பெரியவர். |
| மகாபாடியம் | பேருரை, அகலவுரை. |
| மகாபாதகம் | பெருந்தீவினை. |
| மகாப்பிரபு | பெருஞ்செல்வன். |
| மகாலட்சுமி | திருமகள். |
| மகாவாக்கியார்த்தம் | மறைமுடிவின் பொருள். |
| மகிடம், மகிஷம் | எருமை. |
| மகிடாசுரன் | எருமை வடிவினன். |

| | |
|---|---|
| மகிஷி | அரசி. |
| மகிதலம் | நிலம். |
| மகிபதி, மகிபன் | அரசன். |
| மகிமை | பெருமை, உயர்வு, மேன்மை. |
| மகிளா | பெண். |
| மகீதரம் | மலை. |
| மகீதலம், மகிதலம் | நிலவுலகு. |
| மகுடம் | தலையணி, முடி. |
| மகேசன், மகேசுவரன் | மேலான கடவுள், சிவன். |
| மகேசுவரி | இறைவி, உமை. |
| மகைசுவரியம் | பெருஞ்செல்வம். |
| மகோதரம் | பெருவயிறு. |
| மகோத்பலம் | முளரி, தாமரை. |
| மகோற்சவம் | திருவிழா, பெருவிழா. |
| மங்கலஸ்நானம் | திருமுழுக்கு. |
| மங்கலவாரம் | செவ்வாய்க்கிழமை. |
| மசகம் | கொசுகு. |
| மசானம், மயாநம் | சுடுகாடு. |
| மச்சம், மத்சம் | மீன். |
| மச்சரேகை, மத்சரேகை | வரிக்கயல், வரிமீன். |
| மச்சை, மஜ்ஜை | கொழுப்பு. |
| மஞ்சநம் | முழுகல், குளித்தல். |
| மஞ்சம் | கட்டில், படுக்கை. |
| மண்டலாதிபதி, மண்டலாதிபன் | அரசன். |

| | |
|---|---|
| மண்டுகம், மண்டூகம் | தவளை. |
| மதகயம், மதகஜம், மதகுஞ்சரம் | வெறியானை. |
| மதசலம் | வெறிநீர். |
| மதம் | கொழுப்பு, கொள்கை, நெறி. |
| மதனலீலை | காமவிளையாட்டு. |
| மதாசாரம் | (சமய) ஒழுக்கம். |
| மதாநுசாரம் | (சமய) நெறி நிற்றல். |
| மதாபிமானம் | சமயப்பற்று. |
| மதியீநம் | அறிவுக்குறை. |
| மது | கள், தேன். |
| மதுகரம் | வண்டு. |
| மதுசூதனன் | திருமால். |
| மதுபாநம் | கட்குடி. |
| மதுமேகம் | நீரிழிவு. |
| மதுரம், மாதுரியம் | இனிமை, இனிப்பு, தித்திப்பு. |
| மதுரவசனம், மாதுரியவசனம் | இன்சொல். |
| மதோன்மத்தன் | செருக்கன், வெறியன். |
| மத்தகம், மஸ்தகம் | தலை. |
| மத்தம் | மயக்கம், வெறி. |
| மத்திபம், மத்திமம், மத்தியம் | நடுநிலை, நடு. |
| மத்திமபட்சம் | நடுத்தரம். |
| மத்திமை | நடுவிரல். |

| | |
|---|---|
| மத்திமை வாக்கு | மிடற்றோசை. |
| மத்தியஸ்தம் | நடுநிலைமை, ஒருபாற் கோடாமை. |
| மத்தியஸ்தன் | நடுவன், நடுநிலையாளன். |
| மத்தியானம் | நண்பகல். |
| மநசு, மநஸ் | உள்ளம், மனம். |
| மநச்சஞ்சலம், மநோசஞ்சலம் | மனக்கவலை, மனக்கலக்கம். |
| மநச்சம்பூரணம், மனப்பூரணம் | மனநிறைவு. |
| மநச்சுத்தம் | உளத்தூய்மை. |
| மநஸ்தாபம் | துன்பம், மனவருத்தம். |
| மநநம் | இடையறா நினைவு. |
| மநப்பூர்வம் | முழுமனது. |
| மநவிகற்பம், மநவிகாரம் | மனவேறுபாடு, உளவேறுபாடு. |
| மநித சமூகம் | மக்கட்கூட்டம், மக்களினம், மக்கட்டொகுதி. |
| மநிதர், மனுஷர் | மக்கள், மாந்தர். |
| மநுஷ்யபாஷை | மக்கள் பேசும் மொழி. |
| மநுடன், மநுஷன், மநுஷ்யன் | ஆடவன், ஆள். |
| மநோகரம் | உளக்கவர்ச்சி, இனிமை. |
| மநோசங்கற்பம் | மனக்கோட்பாடு. |
| மநோதிடம் | மனவுறுதி. |
| மநோதைரியம் | மனத்திட்பம். |
| மநோபலம் | மனவலிமை. |
| மநோபாவனை | எண்ணமுதிர்ச்சி. |

| | |
|---|---|
| மநோபீஷ்டம், மநோரதம் | விருப்பம். |
| மநோராச்சியம் | மனக்கோட்டை, வீண் எண்ணம். |
| மநோலயம் | உள்ள ஒருமை, மன வொருமை. |
| மந்தகதி | மெதுவான நடை. |
| மந்தகாசம் | புன்சிரிப்பு. |
| மந்தமாருதம் | தென்றற்காற்று. |
| மந்தம் | செரியாமை, சோம்பல், கூர்மையின்மை, மட்டம். |
| மந்தானகம் | மெல்லோசை. |
| மந்தாரம் | மப்பு, மழைவானம். |
| மந்திரகாரர் | மறைமொழியாளர். |
| மந்திரம் | மறைமொழி. |
| மந்திராத்துவா | மறைமொழி வழி. |
| மந்திராலோசனை | அரசியலாராய்ச்சி, அரசியற் சூழ்ச்சி. |
| மந்திரி | அமைச்சன். |
| மந்திரோபதேசம் | மறைமொழி அறிவுறுத்தல். |
| மமகாரம் | எனதென்றல், புறப்பற்று. |
| மரகதம் | பச்சைக்கல். |
| மரகதவல்லி | பச்சைக்கொடி. |
| மரணபரியந்தம் | இறக்குமளவும். |
| மரணம் | சாவு, இறப்பு, சாக்காடு. |
| மரணயோகம் | தீயவேளை. |
| மரணாவஸ்தை | இறப்புத்துன்பம். |
| மரணை, ஸ்மரணை | நினைவு, உணர்ச்சி. |
| மரியாதை | பணிவு, வணக்கம், கீழ்ப் படிதல். |

| | |
|---|---|
| மருத்து | காற்று. |
| மருமம், மர்மம் | உயிர்நிலை, மறைபொருள். |
| மர்க்கடம் | குரங்கு. |
| மர்ஷணம் | கழுவல், கெடுத்தல். |
| மலபரிபாகம் | பக்குவமடைதல். |
| மலவாசயம், மலாசயம் | மலக்குடர். |
| மலவிசர்ச்சனம் | மலக்கழிவு. |

## மா

| | |
|---|---|
| மாசூல் (இந்து.) | விளைவு. |
| மாஸம், மாதம் | திங்கள். |
| மாதா | தாய், அன்னை. |
| மாதாந்தம் | திங்களிறுதி. |
| மாதுலன் | மாமன். |
| மாத்சரியம், மாற்சரியம் | பகைமை, பொறாமை. |
| மாத்திரம் | மட்டும். |
| மாத்திரை | அளவு. |
| மாநஸம் | மனத்திலிருப்பது, உளத் தோற்றம், எண்ணம். |
| மாநஸவிரதம் | அகநோன்பு. |
| மாநதபூசை | அகவழிபாடு. |
| மாநபங்கம் | பெருமைக்குறைவு, மானக் கேடு. |
| மாநியம் | இறையிலி நிலம். |
| மாந்தம் | செரியாமை. |
| மாந்திரீகன் | மறைமொழிக்காரன். |

| | |
|---|---|
| மாங்மியம் | சிறப்பு. |
| மாமிசதாரி | ஊனுணவினன். |
| மாமிச பட்சணம் | ஊனுணா. |
| மாமிசம் | இறைச்சி, ஊன், புலால். |
| மாரகம், மாரணம் | ஏவலாற் செய்யுங் கொலை, கொலைசெய்தல். |
| மாரன் | வேள். |
| மாருதம் | காற்று. |
| மார்க்கம் | வழி, நெறி. |
| மார்ச்சரியம் | உட்பகை. |
| மார்ச்சனை | முழவொலி. |
| மார்ச்சாலம் | பூனை. |
| மார்த்தாண்டன் | வெய்யோன், பகலோன். |
| மாலுமி (உருது) | கப்பலோட்டி, மீகாமன். |
| மாவுத்தன் (இந்தி) | யானைப்பாகன். |

## மி

| | |
|---|---|
| மிசிரம், மிஸ்ரம் | கலப்பு. |
| மிதம் | அளவு, மட்டு. |
| மிதாகாரம் | அளவான வுணவு. |
| மித்திரத்துவம் | நேயத்தன்மை. |
| மித்திரபேதம் | நட்புப்பிரிவு. |
| மித்திரம் | நட்பு, நண்பு, நேயம். |
| மித்திரன், மித்துரு | நண்பன், அன்பன். |
| மிருகசஞ்சாரம் | விலங்குகளின் நடமாட்டம், விலங்குகளினிருப்பு. |
| மிருகசாதி | விலங்கினம். |
| மிருகத்துவம் | விலங்கின்றன்மை. |
| மிருகம் | விலங்கு. |

| | |
|---|---|
| மிருகாதிபதி, மிருகாதிபன், மிருகராசன், மிருகேந்திரன் | அரிமா, விலங்கரசன். |
| மிருதங்கம் | முழவு, மத்தளம். |
| மிருதி | அறநூல். |
| மிருது | மென்மை, நொய்ம்மை. |
| மிருத்து | மண். |
| மிலேச்சன் | அறிவிலான், வேடன். |
| மின்சார இயந்திரம் | மின்வலிப்பொறி. |
| மின்சாரத் தந்தி | மின்னோட்டக் கம்பி. |

## மீ

| | |
|---|---|
| மீநகேதனன், மீநத்துவசன் | வேள், பாண்டியன், மீனக் கொடியோன். |
| மீநாட்சி | கயற்கண்ணி, மீனக்கண்ணி. |

## மு

| | |
|---|---|
| முகஸ்துதி | முகமன். |
| முகவிலாசம் | முகத்தெளிவு. |
| முகூர்த்தம் | முழுத்தம், நல்வேளை. |
| முக்கியம் | முதன்மை. |
| முத்தன் | விடுபட்டவன், இயல்பாகவே மல நீங்கினவன். |
| முத்தான்மா | வீடுற்ற உயிர். |
| முத்தி | வீடுபேறு. |
| முத்திரா, முத்திரை | அடையாளம், பொறி. |
| முனிசிரேஷ்டன் | முனிவர் தலைவன். |

## மூ

| | |
|---|---|
| மூகம், மூகை, மூங்கை | ஊமை. |
| மூடத்துவம் | அறிவின்மை. |
| மூடமதி | அறிவிலி. |
| மூடர் | அறிவிலார். |
| மூடிகம், மூஷிகம் | பெருச்சாளி. |
| மூர்க்ககுணம் | விடாப்பிடி, முரட்டுக்குணம். |
| மூர்க்கன் | அறிவிலான், முருடன். |
| மூர்ச்சை | அறிவுமயக்கம், உணர்ச்சியின்மை, களைப்பு. |
| மூர்த்தி | கடவுள், வடிவம். |
| மூர்த்திகரம் | கடவுட்டன்மை. |
| மூலக்கிராணி | கழிச்சல். |
| மூலதனம் | முதற்பொருள், விடுமுதல். |

## மே

| | |
|---|---|
| மேககர்ச்சனம் | இடி முழக்கம். |
| மேகம் | முகில், எழிலி, வான், விசும்பு. |
| மேடம், மேஷம் | ஆடு. |
| மேதசு, மேதஸ் | கொழுப்பு. |
| மேதை | நரம்பு, பேரறிவு, மேன்மை, இறைச்சி. |

## மை

| | |
|---|---|
| மைத்திரம் | நேயம், நட்பு. |

## மோ

| | |
|---|---|
| மோகம் | அவா, மயக்கம், பெரு வேட்கை, விருப்பம், மருள். |
| மோகனம் | மயக்கம். |
| மோட்ச சாம்பிராச்சியம் | துறக்கவுலகம். |
| மோட்சப்பிராப்தி | வீடுபேறு. |
| மோட்சம், மோக்கம் | வீடு, துறக்கம். |

## மௌ

| | |
|---|---|
| மௌத்திகம் | முத்து. |
| மௌட்டியம் | அறியாமை, அறியாமைச் செருக்கு. |
| மௌலி, மவுலி | முடி, தலையணி. |
| மௌனம், மவுனம், மோநம் | அடக்கம், பேசாமை, வாய் வாளாமை. |

## ய

| | |
|---|---|
| யக்கிய சாலை, யாக சாலை | வேள்விச் சாலை. |
| யக்கியோப வீதம், யக்ஞோப வீதம் | பூணூல், பூணூற் சடங்கு. |
| யக்யம், யஞ்ஞம் | வேள்வி. |
| யசஸ் | புகழ். |
| யசமானன் | தலைவன், வேட்பிப்போன். |
| யட்சணி | பெண் பேய். |

| | |
|---|---|
| யதார்த்தம் | மெய், உண்மை. |
| யதாவிருத்தம் | நடந்தவாறு, உண்மை வரலாறு. |
| யதி | துறவி. |
| யதேச்சை | விருப்பம், இயற்கை. |
| யதேஷ்டம் | மிகுதி. |
| யத்தனம் | முயற்சி. |
| யத்ருச்சை | தற்செயல். |
| யவட்சாரம் | வெடியுப்பு. |

**யா**

| | |
|---|---|
| யாககருமம் | வேள்விச்சடங்கு. |
| யாகபசு | வேள்விக்குரிய ஆ. |
| யாகம் | வேள்வி. |
| யாசகம் | இரப்பு. |
| யாதவன் | இடையன். |
| யாத்ரா, யாத்திரை | வழிச்செலவு, வழிப்பயணம், ஊர்ப்பயணம். |

**யு**

| | |
|---|---|
| யுகம் | ஊழி. |
| யுகளம் | இரட்டை. |
| யுகாந்தகாலாக்னி | ஊழித்தீ. |
| யுகாந்தம் | உலகமுடிவு, ஊழிமுடிவு. |
| யுக்தம் | தகுதி. |
| யுத்தகளம் | போர்முனை, அமர்க்களம். |
| யுத்தம் | போர், அமர், சண்டை. |
| யுத்தி, யுக்தி | சூழ்ச்சி, பொருந்துமாறு. |
| யுவம் | இளமை. |
| யுவராசன் | இளவரசன். |

## யூ

| | |
|---|---|
| யூகம் | நுண்ணறிவு, சூழ்ச்சி, கருங்குரங்கு. |
| யூகவான் | நுட்ப அறிவினன். |
| யூகித்தல் | நினைத்துப்பார்த்தல், ஓர்தல். |

## யோ

| | |
|---|---|
| யோகச்சேமம், யோகக்ஷேமம் | நலச் செய்தி. |
| யோகநித்திரை | அறிதுயில். |
| யோகம் | தவநிலை, ஒன்றுதல், சேர்தல், கூடுதல், மனவொருக்கம், நல்வினை, கூட்டம். |
| யோகாப்பியாசம் | தவமுயற்சி, ஒன்றும்முயற்சி. |
| யோகி | முனிவன், தவத்தோன். |
| யோகீச்சுவரர் | தவமுதல்வர், தவத்தலைவர். |
| யோக்கியதாபத்திரம் | தகுதிச்சீட்டு. |
| யோக்கியம், யோக்கியதை | தகுதி. |
| யோக்கியன் | தக்கோன், தகுதியுடையவன். |
| யோசனை | ஓர்வு, ஆராய்ச்சி, சூழ்ச்சி. |
| யோனி | கருப்பை, பிறப்பு. |

## யௌ

| | |
|---|---|
| யௌவனதசை | இளமைக்காலம். |
| யௌவனம் | அழகு, இளமை. |

## ர

| | |
|---|---|
| ரசம், ரஸம் | சுவை, சாறு. |
| ரசா, ரஜா | விடுமுறை, ஓய்வு. |
| ரஸ்மி | ஒளி. |
| ரட்சை, ரக்ஷை | காப்பு. |
| ரணம் | போர், புண். |
| ரதம் | தேர். |
| ரத்தம் | செந்நீர், குருதி. |
| ரத்நாகரம் | கடல். |
| ரமா | திருமகள். |
| ரவம் | ஒலி. |

## ரா

| | |
|---|---|
| ராகம் | பண், இசை. |
| ராஜத்துரோகி | அரசர்க்குக் கேடுசூழ்வோன், கோன்கேடு சூழ்வோன், அரசர்க்கு இரண்டகன். |

## ரி

| | |
|---|---|
| ரிஷபம், ரிடபம் | எருது. |
| ரிஷி | முனிவர். |

## ரு

| | |
|---|---|
| ருசி | சுவை. |
| ருத்திராக்ஷம் | சிவமணி, அக்கமணி. |

## ரூ

| | |
|---|---|
| ரூபம் | வடிவு, உருவம். |

## ரே

| | |
|---|---|
| ரேகாகணிதம், ரேகைசாஸ்திரம் | கைவரிநூல். |
| ரேக்கு | வர்த்தி, காக்காப் பொன். |

## ரோ

| | |
|---|---|
| ரோகம் | நோய், பிணி. |
| ரோதநம் | தடை. |
| ரோமம் | மயிர். |

## ரௌ

| | |
|---|---|
| ரௌத்திரம் | வெகுளிச்சுவை. |

## ல

| | |
|---|---|
| லஞ்சம் | கைக்கூலி, கையுறை. |
| லக்ஷம், லட்சம் | நூறாயிரம். |
| லக்ஷ்மி | திருமகள். |
| லக்ஷியம் | இலக்கு, குறி. |
| லப்தஹானி | பேறழிவு. |
| லயம் | ஒடுக்கம். |
| லவணம் | உப்பு. |
| லளிதம் | அழகு. |

## லா

| | |
|---|---|
| லாகவம் | திறமை. |
| லாவண்யம் | அழகு. |

## லி

| | |
|---|---|
| லிங்கம் | குறி, அடையாளம். |

## லீ

| | |
|---|---|
| லீலை | விளையாட்டு. |

## லே

| | |
|---|---|
| லேகன் | எழுதுகிறவன். |

## லோ

| | |
|---|---|
| லோகப்பிரசித்தம் | உலகறிந்தது. |
| லோகம் | உலகம். |
| லோகாபவாதம் | உலகப்பழிச்சொல் |
| லோசநம் | கண். |
| லோபி | ஈகையிலான், பிசுனன். |

## வ

| | |
|---|---|
| வகித்தல் | பொறுத்தல், பூணல், ஏற்றல். |
| வக்கிரசந்திரன் | இளம்பிறை, வளர்பிறை. |
| வக்கிரதந்தம் | வளைந்த பல். |
| வக்கிரம் | வளைவு. |
| வங்கசிந்தூரம் | ஈயச்செந்தூள். |
| வங்கபஸ்பம் | ஈயநீறு. |
| வங்கம் | ஈயம். |
| வசநம் | உரைநடை. |
| வசனித்தல் | சொல்லுதல், |
| வசந்தம் | தென்றற்காற்று, மணம். |
| வசந்தன் | காமவேள். |

| | |
|---|---|
| வசித்தல் | உறைதல், வாழ்தல் தங்கல். |
| வசியம் | கவர்ச்சி. |
| வசீகரணம், வசீகரம் | கவர்ச்சி. |
| வச்சிரகாயம், வச்சிரசரீரம் | அழியா யாக்கை. |
| வச்சிரம் | அழிவில்லாதது. |
| வச்சிராயுதம் | இடிப்படை, வானவர்கோன் படை. |
| வஸ்திரம், வத்திரம் | ஆடை, துணி, கூறை |
| வஸ்து, வத்து | பொருள். |
| வஸ்து நிர்ணயம் | பொருளுறுதி. |
| வஸ்து நிர்த்தேசம் | வருபொருளுரைத்தல். |
| வடவாமுகம், வடவாமுகாக்கினி, வடவை | ஊழித்தீ. |
| வண்ணம், வர்ணம் | நிறம், எழில், அழகு. |
| வதநம் | முகம். |
| வதந்தி | பேச்சு, பலரறிசொல். |
| வதம் | கொலை. |
| வதுவை | மணம், மணப்பெண். |
| வதூ | பெண். |
| வதூவரர் | மணமக்கள். |
| வநக்கிரீடை | பொழில் விளையாட்டு. |
| வநசபீடம் | தாமரை யிருக்கை. |
| வநசம் | தாமரை, முளரி. |
| வநசரன், வநேசரன் | வேடன். |
| வநசாட்சி, வநஜாசனை வநஜை | திருமகள். |

| | |
|---|---|
| வந போஜனம் | சோலையுணா. |
| வநம் | காடு, தோப்பு. |
| வநவாசம் | காடுறை வாழ்க்கை. |
| வநாந்தரம் | காடு. |
| வநிதா, வநிதை | பெண்மகள். |
| வந்தனம் | வணக்கம், வழிபாடு. |
| வந்தனோபசாரம் | வணக்கவுரை. |
| வந்தி, வந்தியா | மலடி. |
| வந்தித்தல் | புகழ்தல், வணங்கல். |
| வந்தியர் | புகழ்வோர். |
| வந்நி | தீ. |
| வந்மம் | தீராப்பகை. |
| வந்மீகம், வான்மீகம் | புற்று. |
| வமிசம், வம்சம் | கால்வழி, பரம்பரை, தலைமுறை. |
| வம்சாவளி | கால்வழிக் குறிப்பு. |
| வயசு, வயது | ஆண்டு, அகவை, வாழ்நாள். |
| வயம், வசம் | அதுவாதல், வழி. |
| வயிரம் | கூர்மை, ஒளிமணிக்கல், காழ்ப்பு. |
| வயோதிகம் | முதுமை. |
| வயோதிகர் | முதியர், கிழவர். |
| வரதஹஸ்தம், வரதகரம் | அருளளிக்குங் கை, அருட்கை. |
| வரதம் | காத்தல், ஈதல். |
| வரதன் | கடவுள். |

| | |
|---|---|
| வரப்பிரசாதம் | அருள். |
| வரம் | பேறு, மேன்மை, அருள். |
| வராகம் | பன்றி. |
| வருக்கம், வர்க்கம் | இனம், வகுப்பு, ஒழுங்கு. |
| வருடம், வருஷம், வர்ஷம் | ஆண்டு. |
| வருடாரம்பம், வர்ஷாரம்பம் | ஆண்டுத் தொடக்கம். |
| வருணம், வர்ணம் | நிறம், குலம். |
| வருணனை, வர்ணனை | ஒப்பனை. |
| வருணன், வர்ணன் | மழைக்கடவுள். |
| வருணாசாரம், வர்ணாசாரம் | குல ஒழுக்கம். |
| வர்க்கம் | வகுப்பு, கூட்டம், இனம். |
| வர்ஷித்தல் | மழைபொழிதல். |
| வர்ணாத்துவா | எழுத்து வழி. |
| வர்ணித்தல் | புனைதல், புகழ்தல். |
| வர்த்தமானம் | செய்தி. |
| வர்த்தனை | வளர்ச்சி. |
| வர்த்திகா | எழுதுகோல். |
| வல்லபம் | வலிமை, ஆற்றல், திறம். |

### வா

| | |
|---|---|
| வாகனம் | ஊர்தி. |
| வாகீசன் | நாவரசன். |
| வாகீஸ்வரி | நாமகள், கலைமகள். |
| வாகு, பாகு | தோள். |

| | |
|---|---|
| வாக்கியப் பிரயோகம் | சொற்றொடர் அமைப்பு. |
| வாக்கியம் | சொற்றொடர், தொடர். |
| வாக்கியார்த்தம் | உரையாடல், பொழிப்புரை. |
| வாக்கு | வாய் (சித்-தத்) உரை, சொல், மொழி. |
| வாக்குச்சகாயம் | சொல்லுதவி. |
| வாக்குத்தத்தம் | உறுதிமொழி. |
| வாக்குமனாதீதன் | உரையுணர்விறந்தோன், கடந்தவன், சொல்லுக்கும் மனதிற்கும் எட்டாதவன். |
| வாக்குமூலம் | உறுதிச்சொல். |
| வாக்குவசீகரம் | சொல்வன்மையாற் றன்வழிப்படுத்தல். |
| வாக்குவல்லபம் | பேச்சுத்திறன், சொற்றிறன், சொல்வன்மை. |
| வாக்குவாதம் | சொற்போர். |
| வாசகம் | சொல். |
| வாசஸ்தலம், வாசஸ்தானம் | இருப்பிடம், உறைவிடம். |
| வாசம், வாஸம் | மணம், இருப்பு. |
| வாசனை | மணம். |
| வாசாமகோசரம் | மொழிதலுக்கு எட்டாதது. |
| வாசாலகன், வாசாலன் | சொல்வன்மையாளன். |
| வாசித்தல் | பயிலல், கற்றல். |
| வாச்சல்லியம், வாத்சல்யம் | இரக்கம், அன்பு, விருப்பம். |
| வாஞ்சனை, வாஞ்சை | விருப்பம், அவா. |

| | |
|---|---|
| வாஞ்சிதம் | விரும்பியது, விரும்பிய பொருள். |
| வாதப்பிரதிவாதம் | வழக்கு எதிர்வழக்கு. |
| வாதம் | காற்று, குளிர்ச்சி, காற்றுப் பிடிப்பு, வழக்கு. |
| வாதனை | துன்பம், வருத்தம். |
| வாதி | வழக்காளி. |
| வாதித்தல் | வழக்கிடுதல். |
| வாதை, வேதனை | துன்பம், வருத்தம். |
| வாத்தியம் | இசைக்கருவி. |
| வாநப்பிரத்தம், வானப்பிரஸ்தம் | காடுறைதவம், காடுறைநிலை. |
| வாநரம் | குரங்கு. |
| வாந்தி | வாயாலெடுப்பு, கக்கல். |
| வாந்திபேதி | கக்கற் கழிச்சல். |
| வாமநம் | குறள், குள்ளம். |
| வாமநன் | குள்ளன். |
| வாமம் | அழகு, இடப்பக்கம். |
| வாமா | பெண். |
| வாயு | கால் (சித்-தத்), காற்று, வளி. |
| வாயுவேகம் | மிகு விரைவு, கடுவிரைவு. |
| வாரணம் | கடல், யானை, தடுத்தல். |
| வாரம் | கிழமை, அன்பு. |
| வாராவதி | பாலம். |
| வாரிதி | கடல், வெள்ளம். |
| வார்த்தை | சொல். |
| வாலசந்திரன், பாலசந்திரன் | இளம்பிறை. |
| வாலிபம் | இளமை. |
| வாலுகம் | வெண்மணல், மணல். |

## வி

| | |
|---|---|
| விகடகவி | பகடி செய்வோன், நகைச் சுவை யளிப்போன். |
| விகடநம் | திறத்தல். |
| விகடம் | பகடி, வேடிக்கை. |
| விகர்ப்பம், விகல்பம் | வேறுபாடு, உறழ்வு. |
| விகாதம் | இடையூறு, தடை, பகை. |
| விகாரம் | அழகின்மை, வேறுபாடு. |
| விகிதம் | நேயம், நட்பு, விழுக்காடு. |
| விகிர்தம் | வேறுபாடு, செய்யப்படாதது. |
| விக்கிநம் | இடையூறு, தீங்கு. |
| விக்கிநேஸ்வரர் | பிள்ளையார். |
| விக்கிரக ஆராதனை | உருவ வழிபாடு. |
| விக்கிரகம் | உருவம், பருப்பொருளுரு. |
| விக்கிரயம் | விலை, விலைப்பொருள். |
| விக்கேபம், விக்ஷேபம் | சேய்மைப்படுத்தல். |
| விக்ஞாபனம் | விண்ணப்பம், முறையீடு, வேண்டுகோள். |
| விசநம், வியசநம் | கவலை. |
| விசயம், விஜயம் | வெற்றி, எழுந்தருளல். |
| விசர்ச்சனம் | வெளிவிடுகை. |
| விசர்ப்பநம் | பரவுதல். |
| விசாரணை | ஆராய்ச்சி, கேள்வி. |
| விசாரம் | கவலை, எண்ணம். |
| விசாலம், விஸ்தீரணம் | விரிவு, அகலம். |

| | |
|---|---|
| விசிட்டம் | எல்லாம். |
| விசித்திரம் | வியப்பு, புதுமை. |
| விசுத்ததேகம் | தூயஉடல், புனித யாக்கை. |
| விசுவநாதன் | சிவன், உலக முதல்வன், முழு முதல்வன். |
| விசுவம், விஸ்வம் | உலகம், எல்லாம். |
| விசுவரூபம் | முழுவடிவம், உலகவடிவம், விரிந்த உருவம், பேருரு. |
| விசுவாச காதகம் | நம்பிக்கைக்கேடு, இரண்டகம். |
| விசுவாசம் | நம்பிக்கை, உண்மை. |
| விசேடணம் | அடைமொழி, அடை. |
| விசேடம், விசேஷம் | மேன்மை, சிறப்பு. |
| விசேட வாக்கியம் | சிறப்பு மொழி. |
| விச்சின்னம் | வேறுக்கப்பட்டது. |
| விச்சை, வித்தை | அறிவு. |
| விஞ்ஞாபநம் | அறிவிப்பு. |
| விஞ்ஞானகலர் | ஒருமலத்தர். |
| விஞ்ஞானமயகோசம் | அறிவுடம்பு. |
| விஞ்ஞானம் | அறிவு, கலை. |
| விஞ்ஞானான்மவாதம் | அறிவே உயிரெனும் வழக்கு. |
| விஞ்ஞை | கல்வி. |
| விஞ்ஞேயம் | அறிவிக்கத்தக்கது. |
| விடங்கம் | அழகு, ஆண்மை, முகடு. |
| விடசுரம், விஷசுரம் | நச்சுக் காய்ச்சல். |
| விடசெந்து, விஷஜெந்து | நச்சுயிர். |

விடம், விஷம் நஞ்சு.

விடயம், விஷயம் } பொருள், நுதலிய பொருள்.

விட்டுணு, விஷ்ணு } திருமால்.

விதண்டாவாதம் அழிவழக்கு.

விதரம் துன்பம், வருத்தம்.

விதந்து, விதவை, விதவா } கைம்பெண், அறுதலி.

விதம் வகை, ஆறு, வழி.

விதானம் மேற்கட்டி.

விதி ஊழ், தெய்வம், முறை, செயற்கை, கட்டளை, ஏற்பாடு, பால்.

விதித்தல் கட்டளையிடல், வகுத்தல்.

விதிவாக்கியம் ஆணைமொழி.

விது திங்கள்.

விதுரன் அறிஞன்.

விதேயன் பணிவுள்ளவன்.

வித்தகம் அறிவு.

வித்தகன் அறிஞன், திறளுளன்.

வித்தாரம், விஸ்தாரம் } விரிவு.

வித்தியாசம் வேறுபாடு, ஏற்றத்தாழ்வு, வேற்றுமை.

வித்தியாதேவி கலைமகள்.

வித்தியார்த்தி மாணவன்.

வித்தீரணம், விஸ்தீரணம் } விரிவு, பெருக்கம், அகலம், அளவு.

| | |
|---|---|
| வித்துவான் | புலவன். |
| வித்தை, வித்யா | நினைப்பு (சித்-தத்), கல்வி. |
| விநயம் | வணக்கம், அடக்கம், அறிவு. |
| விநாயகர் | பிள்ளையார். |
| விநோதம் | விளையாட்டு, புதுமை. |
| விந்து | ஒலிமுதல், வெண்ணீர், தூமாயை. |
| விந்தை | புதுமை. |
| விபசாயம், விவசாயம் | பயிர்த்தொழில், உழவுத் தொழில், வேளாண்மை. |
| விபட்சம் | பிறபக்கம். |
| விபத்தன் | வேறானவன். |
| விபத்து | இக்கட்டு, துன்பம், இடையூறு. |
| விபரீதகுணம் | மாறுபட்டதன்மை. |
| விபரீதம் | வேறுபாடு, திரிபு (தரு). |
| விபவம் | செல்வம். |
| விபாகம் | பிரிவு (தரு), நீக்கம். |
| விபுணன் | சிறந்தோன். |
| விபுதன் | அறிஞன். |
| விபுலம் | வையகம், பெருமை, விரிவு. |
| விபூதி | திருநீறு, நீறு. |
| விமரிசம் | எண்ணல், ஓர்தல், ஆராய்தல். |
| விமரிசை | சிறப்பு. |
| விமலம் | அழுக்கின்மை, மாசின்மை. |
| விமலன் | கடவுள், மாசிலான். |
| விமலா | தூயோன், மாசற்றவன். |
| விமோசநம் | நீக்கம், விடுதலை. |
| விம்பம் | ஒளி, உருவம். |
| வியஞ்சகம் | விளக்கம், விளக்குங்கருவி. |

| | |
|---|---|
| வியதிரேகம் | எதிரிடை (தரு). |
| வியத்தம், வியக்தம் | வெளிப்படை, தெளிவு. |
| வியபிசாரி | ஒழுக்கமிலாள். |
| வியம் | செலவு. |
| வியர்த்தம் | வீண். |
| வியவகாரம் | வழக்கு. |
| வியவஸ்தை | ஏற்பாடு. |
| வியாகரணம் | இலக்கணம். |
| வியாகுலம் | கவலை. |
| வியாக்கியாநம் | விரிவுரை. |
| வியாக்கிரம் | புலி. |
| வியாசம் | கட்டுரை. |
| வியாச்சியம் | வழக்கு. |
| வியாதி | நோய், பிணி. |
| வியாத்தி | ஒப்பு நிறைவு. |
| வியாபகச்சித்து | சிவம், நிறை அறிவு. |
| வியாபகம் | நிறைவு, பரப்பு, விரிவு. |
| வியாபாரம் | வாணிபம், கொண்டுவிற்றல், பண்டமாற்று. |
| வியாப்பியம் | அடங்கிய நிறைவு. |
| வியாவிருத்தி | பிரிவு, பிரித்தல் (தரு). |
| வியூகம் | அணிவகுப்பு, படைவகுப்பு, விலங்கின் கூட்டம். |
| விரகம் | காமவிழைவு, அவா, காதல். |
| விரக்தி, விரத்தி | வெறுப்பு. |
| விரதநியமம் | நோன்பு நெறி. |
| விரதம் | நோன்பு, தவம். |
| விரதியர் | தவத்தினர். |
| விருச்சம், விருட்சம் | மரம். |
| விருச்சிகம் | தேள். |

| | |
|---|---|
| விருத்தம் | வட்டம், கிழத்தன்மை. |
| விருத்தன் | கிழவன், முதியோன். |
| விருத்தாந்தம் | வரலாறு. |
| விருத்தி | ஆக்கம், பெருக்கம், வளர்ச்சி, விளக்கம். |
| விரோதம் | பகை, முரண், மாறுபாடு. |
| விரோதி | பகைவன். |
| விவகாரம் | வாய்பாடு (தரு), வழக்கு. |
| விவரணம் | விளக்கம். |
| விவாகக்கிரமம் | மணமுறை. |
| விவாகம் | மணம், மன்றல். |
| விவாதம் | வழக்கு. |
| விவேகம் | பகுத்தறிவு, அறிவு. |

**வீ**

| | |
|---|---|
| வீதம் | விழுக்காடு. |
| வீதி | தெரு. |
| வீரம் | மறம், ஆண்மை. |
| வீரயுத்தம் | மறப்போர். |
| வீரர் | மள்ளர், மறவர். |
| வீரியம் | மறம், ஆண்மை, வெண்ணீர். |

**வெ**

| | |
|---|---|
| வெகுமானம் | பரிசு, கொடை. |

**வே**

| | |
|---|---|
| வேகம் | விரைவு. |
| வேசரி | கழுதை. |
| வேடம், வேஷம் | கோலம். |
| வேணு | மூங்கில். |

| | |
|---|---|
| வேணுகானம் | குழலிசை. |
| வேதம் | மறை. |
| வேதனம் | கூலி. |
| வேதனை | துன்பம். |
| வேதாத்தியயநம் | மறை ஓதல். |
| வேதாந்தம் | மறைமுடிவு. |
| வேதாரணியம் | திருமறைக்காடு. |
| வேதிகை | திண்ணை, மேடை. |
| வேதிநம் | ஈர்வாள். |
| வேதியர் | அந்தணர், பார்ப்பார். |
| வேத்திரம் | பிரம்பு. |

## வை

| | |
|---|---|
| வைகரிவாக்கு | செவியோசை. |
| வைகுண்டம் | திருமாலுலகு. |
| வைசுவதேவம் | நாடோறுஞ் செய்யும் தீக்காரியமாகிய ஒருவேள்வி. |
| வைசூரி | அம்மை நோய். |
| வைடூரியம் | பூனைக்கண்மணி, ஒளி மணி. |
| வைதவ்யவிரதம் | கைம்மை நோன்பு. |
| வைதிகம் | மறையியல் நெறி. |
| வைத்தியநாதன் | மருத்துவர் தலைவன். |
| வைத்தியம் | மருத்துவம். |
| வைநதேயன் | கருடன். |
| வைபவம் | கொண்டாட்டம். |
| வைரம் | பகை, காழ்ப்பு, ஒளிமணிக்கல். |
| வைராக்கியம் | வெறுப்பு. |

# சித்தாந்தச் சொற்கள்

சித்தாந்த தத்துவங்கள்

| வடசொல் | தமிழ்ச்சொல் |
|---|---|

## உள்பொருள் (தத்துவங்கள்) ௩௬

| **பஞ்ச பூதங்கள்** | **ஐந்து பருப்பொருள்கள்** |
|---|---|
| பிருதிவி | மண். |
| அப்பு | புனல். |
| தேயு | அனல். |
| வாயு | கால். |
| ஆகாயம் | விசும்பு. |
| **பஞ்ச ஞானேந்திரியங்கள்** | **ஐம்பொறிகள்** |
| தொக்கு | மெய். |
| சிங்குவை | வாய். |
| சட்சு | கண். |
| ஆக்கிராணம் | மூக்கு. |
| சோத்திரம் | செவி. |
| **பஞ்ச தன்மாத்திரைகள்** | **ஐந்து நுண்ணிய பொருள்கள்** |
| ரசம் | சுவை. |
| ரூபம் | ஒளி. |
| பரிசம் | ஊறு. |
| சத்தம் | ஓசை. |
| கந்தம் | நாற்றம். |
| **பஞ்ச கன்மேந்திரியங்கள்** | **ஐந்து தொழிலுறுப்புக்கள்** |
| பாணி | கை. |
| பாதம் | கால். |
| வாக்கு | வாய். |

| | |
|---|---|
| பாயுரு | எருவாய். |
| உபத்தம் | கருவாய். |
| **அந்தக்கரணங்கள்** | **அகக்கருவிகள்** |
| மனஸ் | மனம். |
| புத்தி | அறிவு. |
| சித்தம் | நினைவு. |
| அகங்காரம் | முனைப்பு. |
| **சுத்தவித்தியா தத்துவங்கள்** | **ஏழு உணர்வு நிகழ்ச்சிப் பொருள்கள்** |
| *காலம் | காலம். |
| நியதி | பிறழாநிகழ்ச்சி. |
| *கலை | கலை. |
| வித்தை | நினைப்பு. |
| அராகம் | விருப்பு. |
| புருடன் | மகன். |
| *மாயை | மாயை. |
| **பஞ்சசிவதத்துவங்கள்** | **ஐந்து சிவநிலையப்பொருள்கள்** |
| சுத்தவித்தை | தூயநினைவு. |
| ஈசுரம் | தலைமை. |
| சாதாக்கியம் | அருள்நிலை. |
| சத்தி | அன்னை. |
| *சிவம் | அத்தன். |
| அகக்கரணம் | உட்கருவிகள். |

## புறக்கரணம் சுO

| | |
|---|---|
| புறக்கரணம் | புறக்கருவிகள். |

---

* இக்குறி யிட்டசொற்கள் வடசொற்களல்ல, தூய்ச் சொற்களே.

| **தசநாடிகள்** | **பத்துநாடிகள்** |
| --- | --- |
| *இடைகலை | இடதுமூச்சு, இடப்பால் நரம்பு, நாடி. |
| *பிங்கலை | வலதுமூச்சு, வலப்பால் நரம்பு. |
| *சுழுமுனை, சுஷுமுனை | நடுமூச்சு, நடுநரம்பு. |
| சிகுவை | உள்நாக்கு நரம்பு. |
| புருடன் | வலக்கண் நரம்பு. |
| காந்தாரி | இடக்கண் நரம்பு. |
| அத்தி | வலச்செவி நரம்பு. |
| அலம்புடை | இடச்செவி நரம்பு. |
| சங்கினி | கருவாய் நரம்பு. |
| குகு | எருவாய் நரம்பு. |
| **தசவாயுக்கள்** | **பத்துவளி அல்லது காற்று** |
| பிராணன் | உயிர்க் காற்று அல்லது உயிர்வளி. |
| அபானன் | மலக்காற்று. |
| வியானன் | தொழிற்காற்று. |
| உதானன் | ஒலிக்காற்று. |
| சமானன் | நிரவுகாற்று. |
| நாகன் | தும்மற் காற்று. |
| கூர்மன் | விழிக்காற்று. |
| கிருகரன் | கொட்டாவிக்காற்று. |
| தேவதத்தன் | இமைக்காற்று. |
| தனஞ்சயன் | வீங்கற்காற்று. |
| **பஞ்சா சயங்கள்** | **ஐந்து குடல்கள்** |
| அமர்வாசயம் | இரைக்குடல். |
| பகிர்வாசயம் | செரிகுடல். |

| | |
|---|---|
| சலவாசயம் | நீர்க்குடல். |
| மலவாசயம் | மலக்குடல். |
| சுக்கிலவாசயம் | வெண்ணீர்க்குடல். |
| **பஞ்ச கோசங்கள்** | **ஐந்து உடம்புகள்** |
| அன்னமயகோசம் | உணவுடம்பு, பருவுடம்பு. |
| பிராணமயகோசம் | வளியுடம்பு. |
| மனோமயகோசம் | மனவுடம்பு. |
| விஞ்ஞானமயகோசம் | அறிவுடம்பு |
| ஆனந்தமயகோசம் | இன்பவுடம்பு. |
| **ஆறாதாரங்கள்** | **ஆறுநிலைகள்** |
| மூலாதாரம் | மூலம். |
| சுவாதிஷ்டானம் | கொப்பூழ். |
| மணிபூரகம் | மேல்வயிறு. |
| அநாகதம் | நெஞ்சம். |
| விசுத்தம் | மிடறு. |
| ஆக்ஞேயம் | புருவநடு. |
| **திரிமண்டலம்** | **மும்மண்டிலம்** |
| அக்கினிமண்டலம் | தீமண்டிலம் |
| ஆதித்தமண்டலம் | ஞாயிற்றுமண்டிலம். |
| சந்திரமண்டலம் | திங்கள் மண்டிலம். |
| **திரிமலம்** | **மும்மலம்** |
| *ஆணவம் | ஆணவம். |
| *மாயை | மாயை. |
| கன்மம் | வினை. |
| **திரிதோஷங்கள்** | **முக்குற்றங்கள்** |
| *வாதம் | வாதம். |

---

* இக்குறியிட்ட சொற்கள் தமிழே.

| | |
|---|---|
| *பித்தம் | பித்தம். |
| சிலேஷ்மம், கபம் | கவம், கோழை, ஐ. |
| **முவேடணை** | **முப்பற்றுக்கள்** |
| அர்த்தவேடணை | பொருட்பற்று. |
| புத்திரவேடணை | புதல்வர்ப்பற்று. |
| லோகவேடணை | உலகப்பற்று. |
| **திரிகுணம்** | **முக்குணங்கள்** |
| இராசதம் | மனவெழுச்சி, எழுச்சி. |
| தாமதம் | மயல், மயக்கம். |
| சாத்வீகம், சத்துவம் | நன்மை, அமைதி. |
| **மாயாசக்திகள் ஆறு** | **உட்பகை ஆறு** |
| *காமம் | அவா, விழைவு. |
| குரோதம் | வெகுளி, சினம். |
| உலோபம் | பற்றுள்ளம் (குறள்), கடும் பற்றுள்ளம் (பரி-உரை). இவறன்மை. |
| மோகம் | மருள், மயக்கம். |
| மதம் | செருக்கு, வெறி. |
| மாற்சரியம் | உட்பகை, பொறாமை. |
| **இருகன்மங்கள்** | **இருவினைகள்** |
| புண்ணியம் | நல்வினை. |
| பாவம் | தீவினை. |
| **பஞ்சாவஸ்தைகள்** | **ஐவகை நிலைகள்** |
| சாக்கிரம் | நனவு. |
| சொப்பனம் | கனவு. |

---

* இக்குறியிட்ட சொற்கள் தமிழே.

| | |
|---|---|
| சுழுத்தி | உறக்கம். |
| துரியம் | பேருறக்கம். |
| துரியாதீதம் | உயிர்ப்படக்கம், (சி.பாடியம்). |
| இரசம் | சாரம். |
| இரத்தம் | செந்நீர். |
| மாமிசம் | ஊன். |
| மேதஸ் | கொழுப்பு. |
| அஸ்தி | என்பு, எலும்பு. |
| மச்சை | மூளை. |
| சுக்கிலம் | வெண்ணீர். |
| **கன்மேந்திரிய விஷயங்கள்** | **தொழிலுறுப்புக்களின் செயல்கள்** |
| வசநம் | சொல்லல். |
| கமநம் | நடத்தல். |
| தாநம் | கொடுத்தல். |
| விசர்ச்சனம் | விடுதல். |
| ஆநந்தம் | மகிழ்தல். |
| **அட்டமா சித்திகள்** | **எண்பெரும் பேறுகள்** |
| அணிமா | நுண்மை, அணுத்தன்மை. |
| மகிமா | பருமை. |
| கரிமா | விண்டன்மை. |
| இலகிமா | மென்மை. |
| பிராப்தி | விரும்பியதெய்தல். |
| பிராகாமியம் | நிறைவுண்மை. |
| ஈசத்துவம் | ஆட்சியுறுதல். |
| வசித்துவம் | கவர்ச்சி. |
| சித்தாந்தம் | முடிந்த முடிபு, பெறப்பட்ட முடிபு, செம்பொருட்டுணிவு. |
| அவசித்தாந்தம் | பயனில் முடிபு. |

| | |
|---|---|
| சைவசித்தாந்தம் | சைவத்தின் முடிந்த முடிவு. |
| வேதாந்தம் | மறை முடிவு. |
| ஆகமம் | அறிவு நூல். |
| ஞானம் | நூல், அறிவு. |
| கலைஞானம் | கலை அறிவு. |
| பத்திமார்க்கம் | அன்பு நெறி. |
| ஞானமார்க்கம் | அறிவு நெறி. |
| பெத்தான்மா | கட்டுற்ற உயிர். |
| முத்தான்மா | வீடுற்ற உயிர். |
| ஆத்திகசமயம் | உண்டெனுங் கொள்கை. |
| நாத்திகசமயம் | இல்லெனுங் கொள்கை. |
| அந்தக்கரணான்மவாதம் | அகக்கருவியே உயிரெனும் வழக்கு. |
| பிராணான்மவாதம் | மூச்சே யுயிரெனும் வழக்கு. |
| விஞ்ஞானான்மவாதம் | அறிவே யுயிரெனும் வழக்கு. |
| சீவப்பிரமவாதம் | உயிரேகடவுளெனும் வழக்கு. |
| சமயவாதி | சமயக்கணக்கன். |
| நிரீசுரவாதி | பாழ்ங்கோளன். |
| அத்துவிதமுத்தி | இரண்டற்றவீடு. |
| பிரத்தியாகாரம் | ஐந்தவித்தல். |
| தாரணை | நினைவொருமை. |
| இதயகுகை | நெஞ்சகம். |
| தகரோபாசனை | நெஞ்சகவழிபாடு. |
| ஆராதனை | வழிபாடு, வணக்கம். |
| பதிபசுபாசம் | கடவுள் உயிர் மலம், இறையுயிர்தளை. |
| அனுபவம் | பழக்கம், நுகர்ச்சி, அழுந்தியறிதல் (பாடியம்). |
| தனு, கரண, புவனபோகம் | உடம்பு உறுப்பு உலகு நுகர்பொருள். |

| | |
|---|---|
| அவதாரம் | பிறவி. |
| ஆசாரிய சுவாமிகள் | ஆசிரிய அடிகள். |
| தரம் | தகுதி, நிலை. |
| யோகிகள் | தவத்தோர். |
| பிரமாணம் | அளவை, மேற்கோள். |
| சம்பந்தம் | இயைபு, தொடர்பு. |
| சுகம், பாக்கியம் : | நலம். |
| ஆனந்தம் | இன்பம். |
| *பகுதி | முதனிலை; அடி. |
| பாஷியம் | பேருரை, அகலவுரை. |
| கரம் | செய்வது. |
| பிரீதி | உவகை, விருப்பம். |
| *வீரர் | மறவர். |
| கணம் | குழாம், கூட்டம். |
| மூர்த்தி | கடவுள், உருவன், வடிவன். |
| பாவனை | ஒப்பு, எண்ணம், நினைப்பு. |
| கண்டம் | நிலப்பிரிவு, பிரிவு. |
| தருக்கம் | அளவை. |
| சாதி | இனம். |
| சச்சிதானந்தம் | உண்மை யறிவின்பம். |
| விக்கிரகம் | பருப்பொருளுரு, சிலை, திருவுருவம். |
| புத்தி | அறிவு. |
| வியவகாரம் | உலகவழக்கு. |
| பாரமார்த்திகம் | உண்மைநிலை. |
| பரப்பிரமம் | மிகப்பெரியது. |
| சித்து | அறிவு. |
| பூதம் | முதற்பொருள், முதல். |

---

* இக்குறியிட்ட சொற்கள் தமிழே.

| | |
|---|---|
| படம் | ஓவியம். |
| பலிபீடம் | படையல்மேடை. |
| உபபிருங்கணம் | வழிநூல், சார்புநூல். |
| அவசரம் | விரைவு. |
| *அமயம் | நேரம். |
| அற்புதம் | புதுமை. |
| இரசவாதம் | பொன்செய்முறை. |
| பரவயிந்தவம் | மேல்மாயை. |
| மனித | ஆண்மை. |
| சிவாயநம | சிவனேபோற்றி. |
| சிற்பவித்தை | கற்றச்சு, கொற்று, கொத்து. |
| சீவர்கள் | உயிர்கள். |
| சிங்கம் | அரிமா. |
| நிர்க்குணோபாசனை | குணமில்லதன் வழிபாடு. |
| நிமித்தகாரணம் | வினைமுதல். |
| காருணியம் | அருள். |
| சங்கிதை | தொகுதி. |
| சத்தி | ஆற்றல். |
| சரிதம் | வரலாறு. |
| தீர்க்கதரிசி | முக்காலவுணர்வினன். |
| நாதம் | ஒலி. |
| *நாடி | நரம்பு, குழாய். |
| சுத்தமாயை | தூமாயை. |
| அசுத்தமாயை | தூவாமாயை. |
| பிரகிருதிமாயை | பகுதிமாயை. |
| திரோதகம் | மறைத்துக்கொடு நிற்றல். |
| சாபம் | தீமொழி. |
| சபதம் | வஞ்சினம். |

* இக்குறியிட்ட சொற்கள் தமிழே.

| | |
|---|---|
| சிருட்டி | படைத்தல். |
| திதி | காத்தல். |
| சங்காரம் | அழித்தல். |
| திரோபவம் | மறைத்தல். |
| அனுக்கிரகம் | அருளல். |
| சாம பேத தான தண்டம் | இனிய சொற்கூறல், வேறு படுத்தல், கொடுத்தல், ஒறுத்தல், |
| தடத்தலக்கணம் | பொதுவியல். |
| சொரூபலக்கணம் | சிறப்பியல், உண்மையியல். |
| ஆநந்தரியம் | யாப்பு. |
| விடயம் | நுதலியபொருள். |
| அதிகாரி | கேட்போர். |
| பிரயோசனம் | பயன். |
| வைகரிவாக்கு | செவியோசை. |
| மத்திமைவாக்கு | மிடற்றோசை. |
| பைசந்திவாக்கு | நினைவோசை. |
| சூக்குமைவாக்கு | நுண்ணோசை. |
| நாதம் | முதல் ஒலி. |
| விந்து | ஒலி முதல். |
| சஞ்சிதகன்மம் | தொகைவினை, இருப்பு வினை. |
| பிராரத்தகன்மம் | துவக்கவினை, நுகர்வினை. |
| ஆகாமியகன்மம் | நிகழ்வினை. |
| ஈசானன் | இயக்கம். |
| தற்புருடம் | ஆட்சி. |
| அகோரம் | நடுக்கம். |
| வாமதேவம் | விளக்கம். |
| சத்தியோஜாதம் | தோன்றுவித்தல். |
| பரிக்கிரகசக்தி | வைப்பாற்றல். |

| | |
|---|---|
| திரோதானசக்தி<br>ஆதிசத்தி | மறைப்பாற்றல். |
| இச்சாசத்தி | விழைவாற்றல். |
| ஞானசத்தி | அறிவாற்றல். |
| கிரியாசத்தி | செயலாற்றல். |
| சிற்சத்தி | அறிவாற்றல். |
| சற்காரியவாதம் | உள்ளது தோன்றலின் முறைமை. |
| ஆகந்துகமலம் | இடைச்சேர் மலம். |
| சகசமலம் | உடன்றோன்று மலம். |
| அநாதிகேவலம் | படைப்பு முன் தனிநிலை. |
| கேவல நிலை | மறைப்புநிலை. |
| சகல நிலை | சிறிதறிவுநிலை. |
| சுத்த நிலை | தூநிலை. |
| தாசமார்க்கம் | அடிமைநெறி. |
| புத்திரமார்க்கம் | மகவுநெறி. |
| சகமார்க்கம் | தோழமைநெறி. |
| சன்மார்க்கம் | மெய்ந்நெறி. |
| சுத்தகன்மம் | தூயவினை. |
| அசுத்தகன்மம் | வாலாவினை. |
| அத்துவா | வழி, நெறி. |
| வர்ணத்துவா | எழுத்துவழி. |
| பதாத்துவா | சொல்வழி. |
| மந்திராத்துவா | மறைமொழிவழி. |
| கலாத்துவா | கலைவழி. |
| தத்துவாத்துவா | பொருள்வழி. |
| புவனத்துவா | உலகவழி. |
| சாலோகம் | சிவவுலகு. |
| சாரூபம் | சிவனுருவம். |
| சாமீப்பியம் | சிவனருகிருப்பு. |

| | |
|---|---|
| சாயுச்சியம் | சிவப்பேறடைவு. |
| சங்கற்பம் | எண்ணம். |
| விகற்பம் | வேறுபாடு. |
| சவிகற்பக்காட்சி | வேற்றுமைக்காட்சி. |
| நிருவிகற்பக்காட்சி | எழுவாய்க்காட்சி. |
| சகலர் | மும்மலக்கட்டினர். |
| பிரளயாகலர் | இருமலக்கட்டினர். |
| விஞ்ஞானகலர் | ஒருமலக்கட்டினர். |
| ஞானகாண்டம் | அறிதகுதொகுதி. |
| பக்திகாண்டம் | விழைதகு தொகுதி. |
| கருமகாண்டம் | செய்தகு தொகுதி. |
| ஞானம் | அறிவு, மெய்யறிவு. |
| அஞ்ஞானம் | அறியாமை, இருள். |
| தன்மம் | அறம். |
| அதன்மம் | மறம். |
| வைராக்கியம் | வெறுப்பு. |
| அவைராக்கியம் | விருப்பு. |
| ஐசுவரியம் | செல்வம். |
| அனைசுவரியம் | வறுமை. |
| பிரத்தியக்ஷப் பிரமாணம் | காண்டலளவை. |
| அனுமானப் பிரமாணம் | கருதலளவை, வழியளவை. |
| ஆகமப் பிரமாணம், சத்தப் பிரமாணம் | உரையளவை. |
| அருத்தாபத்திப் பிரமாணம் | பொருளளவை. |
| அபாவப் பிரமாணம் | இன்மையளவை. |
| சமவாயம், தாதான்மியம் | நீக்கமின்றி நிற்றல். |

| | |
|---|---|
| ஸ்ருஷ்டி | தோற்றம். |
| திதி | நிலை. |
| சங்காரம் | இறுதி. |
| இச்சாஞானக்கிரியை | விழைவு அறிவு செயல். |
| அபிமுகம் | உண்முகம். |
| சத்தியபாவனை | மெய்ந்நினைவு. |
| அசத்தியபாவனை | பொய்ந்நினைவு. |



## உ. பிற்சேர்க்கை

யாழ்ப்பாணம் உயர்திரு. சுவாமி ஞானப்பிரகாசர் அவர்களும், வேறு சில அன்பர்களும் ஐயப்பாடு நிகழ்த்திய சொற்கள் குறித்து, சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகட்கு எழுதிக்கேட்டதற்கு வந்த விடைக் குறிப்புக்கள்.

| வடசொல் | தமிழ்ச்சொல் |
| --- | --- |
| இராசப் பிரதிநிதி | அரசியற்றலைவன், காவலன். |
| இராசமானியம் | இறையிலி. |
| இராசதெரிசனம் | அரசற்காணல். |
| உத்தூளனம் | சாம்பற் பூச்சு. |
| உத்தேசம் | கருத்து, ஏறக்குறைய, மதிப்பு. 'மதிப்பு' (தமிழ்) |
| | 'உவணம்' உயரம், உயரத்திற் பறக்கும் பருந்திற்கும் பெயர் (தமிழ்) |
| | 'உவமை' என்பதற்கு எதிரிலுள்ள தென்பது அடிப் பொருள். இது தமிழ்; (தொல்காப்பியச் சொல்.) |
| | இது வடமொழியிற் சென்று உபமா உபமானம் எனத் திரிந்தது. இத்தமிழ்ச் சொல்லைக் கொண்டு வடவர் 'உவமேயம்' என்னுஞ் சொல்லை ஆக்கினர். |

**உவமேயம்**

பொருள்.

'பருவம்' தமிழ்; காலத்தின் பரிய ஒரு கூறு. 'பரு' அடி.
—(தொல்காப்பியம்)

'ஈமம்' தமிழ்; சுடுகாடு என்பது பொருள். இஃது 'ஈம்' எனத் தொல்காப்பியத்தில் வந்துள்ளது.

'ஏமம்' (தமிழ்) நள்ளிரவு, பொன், இன்பம், காவல் பொருள். பொன் என்னும் பொருளில்இது வடமொழி யிற்சென்று 'ஹேமம்' என வழங்கும். காவல் என்பது இதன் முதனிலைப்பொருள்.

**மரியாதை**

பணிவு.

'படிவம்' என்பது 'வடிவம்' என்னுந் தமிழ்ச்சொல்லின் திரிபு. 'தெளிவு' முதனிலைப் பொருள்.

'தடம்' தமிழ், அகலமுடையது. "தடவுங் கயவும் நளியும் பெருமை"
—(தொல்காப்பியம்)

'உரு' தமிழ்; நிறம் என்பது பொருள்; இது வடமொழியில் 'ரூபம்' எனத் திரிந்து வழங்கும். "உருவுஉட்கெழுவு நிறனுகும்மே"
—(தொல்காப்பியம்)

| | |
|---|---|
| | 'உலகம்' தமிழ். உல என்னும் முதனிலையிற்றோன்றி அழிவது என்னும் பொருளைத் தருவது. இது தமிழ்ச் சொல்லே யென்பர் நச்சினார்க்கினியருந் தொல்காப்பியவுரையில்; இது வடமொழியில் 'லோகம்' எனத் திரிந்து வழங்கும். |
| உரொக்கம் | கைப்பணம், இருப்பு. |
| ஆதாரம் | நிலைக்களம், களைகண். |
| உன்மத்தன் | வெறியன். |
| இடைகலை | இடது மூச்சு. |
| பிங்கலை | வலது மூச்சு. |
| சுழுமுனை | நடு மூச்சு. |
| அன்னமய கோசம் | பருவுடம்பு. |
| பிராணமய கோசம் | வளியுடம்பு. |
| மனோமய கோசம் | மனவுடம்பு. (மனம்-தமிழ்) |
| விஞ்ஞானமயகோசம் | அறிவுடம்பு. |
| ஆனந்தமய கோசம் | இன்பவுடம்பு. |
| | 'புண்ணியம்' தமிழ், மதிக்கப்படுவது என்பது; இது 'புள்ளி' என்னும் அடியினின்றுண்டாயது. 'புனிதம்' தமிழ், புனலால் (நீரால்) கழுவித் தூய்தாக்கப்பட்டது. 'புனல்' முதனிலை. |
| சம்பிரதாயம் — | தொல் வழக்கு, தொன்று தொட்ட வழக்கு, முன் |

| | |
|---|---|
| | னோர் நடை, முன்னோர் முறை. |
| மௌலி | முடி. |
| | 'ஜலம்' என்பது சலம் என்னுந் தமிழ்ச்சொற் றிரிபு; சலசலவென் றோடுவது பற்றி நீருக்கு வந்தபெயர். |
| பத்தியம் | மருந்துணா; செய்யுள். |
| சவிகற்பக் காட்சி | வேற்றுமைக் காட்சி. |
| நிருவிகற்பக் காட்சி | எழுவாய்க் காட்சி. |
| வியாப்பியம் | அடங்கிய நிறைவு. |
| வியஞ்சகம் | விளக்கம், விளக்குங் கருவி. |
| பிரவாக நித்தம் | வெள்ளநிலை, வெள்ளம்போல் என்றுமுள்ளது, நீரோட்டம்போல் தொடர்ந்துள்ளது. |
| துவாதசாந்தம் | பன்னிரண்டாம் நிலை; (துவாதசம் — பன்னிரண்டு, அந்தம்—முடிவு.) |
| 'பரிகாரம்' | இச்சொல்லின் முதல் நிற்கும் பரி என்பது வெட்டு, அறு, நீக்கு, இரங்கு, வருந்து, சும என்னும் பொருள்களிற் பண்டைத் தமிழ் நூல்களில் வருதலின் அது தமிழ்ச் சொல்லேயாம். ஆனால், அதிலிருந்துண்டான 'பரிகாரம்' என்னுஞ் சொல் பழைய தமிழ் நூல்களிற் காணப்படவில்லை; |

| | |
|---|---|
| | ஆதலாற் 'பரிதல்' என்னுஞ் சொல் தமிழ் என்றும், அதிலிருந்து வடவர் ஆக்கிய 'பரிகாரம்' வடமொழி யென்றும் முடித்தல் வேண்டும். |
| ஆசிரியர் (தமிழ்) | ஆசு-பற்றுக்கோடு, மாணுக்கர்க்குப் பற்றுக்கோடானவர். |
| குரவன், குரு (தமிழ்) | குரு-பெருமை, குரிசில் என்பதும் தமிழ். |
| தவம் (தமிழ்) | தபு, தவு-கெடு; மலத்தைக் கெடுப்பது. |
| அபரோக்ஷ ஞானம், பிரத்தியக்ஷ ஞானம் (வட) | காட்சியளவை. |
| அபரமுத்தி (வட) | கீழான வீடுபேறு. |
| அநுபானம் (வட) | பருகுவதற்கு உதவியாவது; கறி துவையல். |
| பூசை | 'பூசல்' ஒரு வகை ஒலி; அதனைச் செய்வதுபூசை. பூசை, பூஜை எனவும் வரும். |
| ஆன்மபோதம் (வட) | உயிரினுணர்வு. |
| காரணம், காரியம் (தமிழ்) | 'கார்' என்பது அடி, கார் மழைக்கு ஏது; அதனுல் ஏது காரணமாயிற்று; காரினின்று பெய்யும் மழை பயன்; அதனுல் பயன் காரியமாயிற்று. |

| | |
|---|---|
| பாவம் (தமிழ்) | 'பாழ்' என்னும் அடியாகப் பிறந்த, தமிழ்ச் சொல்; (சுவாமி ஞானப்பிரகாசர்) |
| குணம் (தமிழ்) | கண், குண்-அடிகள்; ஆராயப் படுவது. |
| மனம் (தமிழ்) | 'மன்'—அடி. |
| மதி (தமிழ்) | அளப்பது; காலத்தை வரை யறுப்பது. |
| மூலம் (தமிழ்) | 'மு'—அடி. முதலாவது. |
| கோணம் (தமிழ்) | கொள், கோள், கோண்— அடி;—வளைதல். |
| யாமம் (தமிழ்) | 'யா'—கட்டு, தமிழடி; உயிர் களை உறக்கத்திற் பிணிப் பது. |
| தேவர், தெய்வம் } (தமிழ்) | 'தீ' அடி; ஒளி வடிவினர்; தெய்வம் என்பதும் அப் படியே. |
| உமை | அம்மை என்பதன் றிரிபு. |
| மலம் (தமிழ்) | மல — கலங்கு. மலக்கம்— கலக்கம். |
| பாசம் | பாசி என்னும் பொருளில் தமிழ்; கட்டுவது என்னும் பொருளில் வடசொல். |
| அரன் | தீவினைகளை அரிப்பவன். (தமிழ் வடமொழி இரண் டிற்கும் பொது). |
| ஆணவம் | ஆளுதல் என்பதன் அடியாக உயிரைத் தன்வழிப் படுத்தி ஆளுதல்பற்றி ஆணவம் என்னுஞ் சொல் எழுவதா |